நீங்களே கண்டுகொள்ளுங்கள்

# மின்னலடிக்கும், ஸூப்பர் ரின் வெண்மை..
# இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார்
# எதனையும் மிஞ்சும் வெண்மை







வேளை தவறாமல் உபயோகியுங்கள் ஸூப்பர் ரின். எத்தகைய வெள்ளைவெளேர் சலவை கிடைக்கிறது பாருங்கள்—இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை அது. காரணம், மேம்பட்ட வெளுப்பூட்டும் சக்தி அடங்கியது ஸூப்பர் ரின். நீங்களே கண்டுகொள்ளுங்கள்.




**இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் விட அதிக வெளுப்பூட்டும் சக்தி.**

லின்டாஸ்-RIN 34-3217 TM (KK)

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

# Kalki Shopping Page

## *Nambisan's* Pure Ghee

**FOR ABISHEKAM AND POOJA OF SRI LORD AYYAPPAN.**




NAMBISAN'S DAIRY PRIVATE LTD
MADRAS-600 028.
Plant: Uttukuli R.S.,
Coimbatore Dist.

---

with every purchase of

## GULMARG REFRIGERATOR

**Free ONIDA WATCH Worth Rs. 458**





Electronics Limited
makes good things even better!

**S.C.Shah**
4, Whites Road, Madras-14.
PHONE : 83375 & 88671

---



## பார்த்தாஸ் டெக்ஸ்டைல்ஸ்

உங்கள் ஜவுளி தேவைகளுக்கு
தென்னகத்தின் தலைசிறந்த
ஜவுளி ஸ்தாபனம்

**பார்த்தாஸ்**
நாகர்கோவில்

**கோட்டயம், எர்ணாகுளம்,
சங்கனாச்சேரி, ஆற்றிங்கல்,
காயங்குளம் &K.L.R. பாம்பே**

Mgd. by
M. Srinivasa Reddiar

---

## ஆண்களுக்கு தையற்கலை வகுப்புகள்

நேரிலும் தபால் மூலமும் 2 மாத / 6 மாத பகுதிநேர / முழுநேர வகுப்புகளில் பயின்று சுயமாக பொருளீட்ட ஆண்களுக்கு அரிய வாய்ப்பு. ஷிப்டில் உள்ளவர்களுக்கு வசதி செய்யப்படும். செய்முறை வகுப்புகள், தமிழ், தெலுங்கு ஆங்கில மலையாள மொழிகளில் பயிற்சி அளிக்கப்படுகிறது. முற்றிலும் எளிய நவீன முறையில் நடத்தப்படும் ஒரே ஸ்தாபனம்.

நேரில் வரவும் (அ) விபர புத்தகம் பெற ரூ. 2-00 M. O. செய்க.

**வனஜ்
தையற் பள்ளி**
32, காந்தி இர்வின் சாலை எழும்பூர்.
சென்னை-600008
(டென்னிஸ் ஸ்டேடியம் அருகில்)

(எந்த நேரத்திலும் சேர்ந்துகொள்ளலாம்)

# Kalki Shopping Page

# சிரிப்பு மழை



''அவர் ஏன் பேசும்போது நடுநடுவில 'செண்ட்' தடவிக்கிறார்?''

''அவர் பேச்சில் தமிழ் மணம் கமழ்வதற்காக!''

— சம்பத் குமாரி



''இன்னிக்கு எங்க வேலைக்காரி ரொம்ப நல்லா பாத்திரம் தேச்சி துணி துவைச்சி பீரோ அடியில் எல்லாம் குப்பை இல்லாமல் பெருக்கிப் பளபளான்னு வேலை செய்துட்டா..!''

''அட அதுக்கு ஏன் இப்படி வருத்தமா இருக்கிறே..?''

''இப்படி நன்றாக வேலை செய்கிற அன்னிக்கு எல்லாம் அவள் சினிமாவுக்குப் போகப் பணம் கேட்கிறாளே..!''

- ரமணிரங்கநாதன்

பெண் சிங்கம்: ''என் வயிற்றுக்குள் ஒரு சிங்கம் இருக்கு..!''

ஆண் சிங்கம்: ''பலே! எத்தனை மாத கர்ப்பம்....?''

பெண் சிங்கம்: ''கர்ப்பமுமில்லே மண்ணுமில்லே! இந்த வழியாப் போன துளசிங்கம் என்கிற ஆசாமியை விழுங்கிட்டேன்!''

— இரா. ஞானசௌந்தரி

அவன்: ''கண்ணில் அடிபட்டவன் எப்படிக் கத்துவான் தெரியுமா?''

இவன்: ''எப்படி?''

அவன்: ''EYEயோ EYEயோன்னு!''

அவள்: ''கலாவின் டிரஸ் எப்படி?''

இவள்: ''ம்... சகிக்கலா!''

-உ. ராஜாஜி

கலா:- ''வயசுப் பொண்ணுக்கு அப்படி என்னடி நான் தலைமுழு பூ வேண்டிக் கிடக்குது?''ன்னு திட்டறாங்க, எங்கம்மா.

மாலா:- அப்படியா? சுத்த கர்நாடகமா இருப்பாங்க போல இருக்குதே?

கலா:- ஆமாண்டி! திங்கட்கிழமை அடுக்கு மல்லி; செவ்வாய் கிழமை உதிரிப்பூக்கள்; புதன்கிழமை நீல மலர்கள்; வியாழக்கிழமை நிறம் மாறாத பூக்கள் பார்த்ததுக்குத்தான் இந்தப் பேச்சு!

- ஆர். மனோகரன்






# மூன்று பேர்களிடம்



மூன்று நூல்கள்!

சென்னையில் மூன்று பேர்களிடம் ஏதோ தெரியாத்தனமாக மூன்று நூல்களைக் கொடுத்துவிட்ட ஒரு திருபர் ஒரு வாரம் சென்று அவர்களைச் சந்தித்து அந்தப்புத்தகங்கள் பற்றிக்கேட்டார். அவர்கள் கூறியதை திருபர் அப்படியே எழுதுகிறார்.

### பெண்களைக் கவர்வது எப்படி?

சென்னை செங்காங்கடை செங்கேணி அம்மாளின் கணவர் செங்கல்வராயன் கூறுவது:

''புத்தகமா! அதையேன் கேட்கறீங்க! ஏதோ கொடுத்தீங்களேன்னு ராத்திரி சாப்பிட்டதும் படுக்கையிலே உட்கார்ந்து படிக்க ஆரம்பிச்சேங்க—அவ்வளவு தான் சரியா மாட்டிக்கிட்டேன். என்னோட பொண்டாட்டிக்கிட்டே தான்.

''எத்தப் பொண்ணை மயக்க இதெல்லாம் படிக்கிறீங்க - இருக்கிற ஒரு பொண்டாட்டியை மயக்கிற துக்கே வக்கு இல்லே-வீட்டுல, ஒண்ணு கொடுக்க ஒண்ணு இல்லே! இதுக்கெல்லாம் கொட்டி அழ எங்கிருந்து நான் துட்டு கிடைக்கிறதோ? - வயசுக்குத் தக்கப் புத்தகம் படிக்க வேண்டாம்? பெண்களைக் கவர்வது எப்படியா? கொண்டாங்க அதை' — என்று அந்தப் புத்தகத்தைப் புடுங்கி அடுப்பிலே போட்டுட்டா சார். அந்தப் புத்தகம் என்ன விலையோ சொல்லுங்க, கொடுத்திடறேன். ஏன் சார்! உங்களுக்கு ஒரு இராமாயணம், ஒரு மகாபாரதம், ஒரு குசேலோபாக்கியானம் கிடைக்கலியா எலக்குக் கொடுக்க? ஆளை விடுங்க - கோடி கும்பிடு''

### கராத்தே கற்றுக் கொள்ளுங்கள்

குடும்பத் தலைவி சோத்துக் கடை கப்பம் மாவிடம் ஒரு வாரம் சென்று கேட்டபோது:

''சரியாப்போச்சிப்போங்க! ஏற்கனவே என்னோட பேட்டையிலே ஆறுசைப் பட்டாபினோடு பக்கிரி, கத்திரி கபாலி எல்லாம் என் வாயைக் கண்டாலே கபால்னு ஒதுங்கிக் குவாங்க! என்னோட வூட்டுக்காரர் ''செந்நீர்'' குடிக்காம இருக்கணுமேங்கிறதுக்காக ஏதோ ரெண்டு போட்டு வீட்டிலே மடக்கி வைப்பேன். என்ன காயம் பட்டாலும், எதைத்திட்டினாலும், 'பேய் இன்னாலும் பொண்டாட்டின்னுட்டு எங்கூடவே கெடப்பாரு— அன்னிக்கி இந்தக் கராத்தேப் புத்தகத்தை எங்கையிலே பார்த்தாரோ இல்லியோ அன்னிக்கு ஓடினவருதான் இன்னும் இந்த ஊருக்கே வரல்லே - போலீசுலே கூடச் சொல்லிட்டேன். என்ன ஆனாரோ? நான் என்ன இதைக் கத்துக்கினு அவரை அடிக்கவா நெனைச்சேன் - நல்லாக் கொடுத்தீங்களே புத்தகம்! இந்தாங்க நீங்களே வச்சிக்கிங்க.!''

### வெளி நாட்டுப் பயணங்கள்

முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் ''தாவுபாயி'' அவர்களிடம் ஒரு வாரம் சென்ற பின் கேட்ட போது:

''அய்யோ! விதி இன்றது இதாங்க! ஏதோ கொடுத்தீங்களே படிப்போம்னு இந்தப் புத்தகத்தை அப்போது தாங்கப் புரட்டினேன்—அந்தச் சமயம் பார்த்து என்னோட அப்போதைய கட்சித்தலைவர் வந்துட்டார். இந்தப் புத்தகத்தின் தலைப்பைப் பார்த்ததுமே — 'என்னங்க இது! இன்னும் தேர்தலே வரலே அதுக்குள்ளாலே வெளிநாடு புத்தகமா? ஏதேது உங்களை ஜெயிக்க வச்சிட்டா வெளி விவகார மந்திரிபதவி கேட்பீங்க போல இருக்குதே? நீங்க பழைய கட்சிக்கே போயிடுங்க' என்று சொல்லி அடுத்த நாள் பேப்பரைப் பார்த்தா - ''எந்தக்கட்சி வெளிவிவகார மந்திரி பதவி கொடுக்குமோ அந்தக் கட்சிக்கே தாவுபாயி ஆதரவு கொடுப்பார்'' - என்று செய்தி வெளியாகியது! அதிலிருந்து என் வீட்டுக்கு எந்தக் கட்சிக்காரரும் வர்றதில்லே-நானே போனாலும் பேச மாட்டேங்கறாங்க - இப்போ என்னத்தைச் செஞ்சித் தொலைப்பேன்? நல்லாக் கொடுத்தீங்களே ஒரு புத்தகம்! இந்தாங்க புடிங்க!''

பேட்டி: வீணத்தமன்











தமிழ்ப் படங்களில் இப்போது பிரமீளா வைக் காணும். இதுபற்றிப் பிரமீளா வைச் சந்தித்தபோது இதை நேருக்கு நேரா கவே கேட்டுவிட்டேன். அவர் கூறினர்:

''நான் நடித்த படங்கள் எல்லாம் கவர்ச் சியும் கண்ணியமும் மிக்கவை. உதாரணத் துக்குச் சொல்லவேண்டுமானல் ''அரங் கேற்றம்'', ''ராதா'' போன்ற படங்கள். மலையாளத்தில் நான் சிறு சிறு வேடங்களில் நடித்துக் கொண்டிருந்தாலும் முழுமையான கதாநாயகி வேடம் ''தம்புராட்டி'' படத் தில் எனக்குக் கிடைத்தது. அது கொஞ்சம் கவர்ச்சிகரமான வேஷமாக இருந்தாலும் முதலில் கிடைக்கும் ஒரு கதாநாயகி வேஷம் என்பதால் ஒப்புக் கொண்டேன். படம் நன்றாகத்தான் ஓடியது. விளைவு, பல தமிழ்ப் படத் தயாரிப்பாளர்கள் என்னை ஒப் பந்தம் செய்ய ஓடிவந்தார்கள். ஆனல் எல்லாமே ''தம்புராட்டி''யின் கதை யும், உடையுமாகத்தானிருந்தன. அவர்களெல்லாம் படம் பண்ணுவதை விட உடையில்லாத உடலை மக்களுக் குக் காட்டிப் பணம் பண்ணுவதில் தான் குறியாக இருந்தார்கள். நாலு படங்கள் செய்தாலும் நல்ல படமாகச் செய்யலாம் என்ற நினைப்பில்தான் வந்த பல்வேறு படங்களை (உதாரண மாக ''இனிக்கும் இளமை'', ''சக் களத்தி'' போன்றவைகளை) வேண்டா மென்றேன். சரிதானே?''

● ● ●

''எங்களுக்கெல்லாம் வயதாகி விட்டது. பழைய முகத்தை நீங்கள் பார்ப்பீர்களா? உங்களுக் கெல் லாம் புது முகங்கள்தானே தேவை?'' இப் படிச் சரமாரியாகப் பொரிந்து தள்ளினர் வேதனையுடனும், அதே சமயம் விரக்தி யுடனும் சுமித்ரா. ''என்ன இப்படிக் கேட் கிறீர்கள்! நீங்கள்தானே இன்று கதாநாய கியாக கொடி கட்டிப் பறக்கிறீர்கள்! உங்களுக்குத்தானே இன்று ஏகப்பட்ட 'டிமான்ட்'. இப்படி இருக்கும்போது ஏன் இந்த வேதனை, விரக்தி?'' என்று வியந்து வினவினேன். அவர் சிரித்தார்.

''நான் குறிப்பிட்டது லக்ஷ்மியின் டைரக் ஷனில் தயாராகி வரும் ''மழலைப் பட் டாளங்கள்'' படத்தில் நான் பேசும் ஒரு டயலாக் ஸார்!'' என்றார்.

இந்தப் படத்தின் மூலம் சுமித்ராவும் சரி, லக்ஷ்மியும் சரி தங்களது திரைப் பட வாழ்க்கையில் ஒரு திருப்பம் ஏற்படும் என்று எதிர்பார்க்கிறார்கள். ''கட்டா மீட்டா''வின் தமிழாக்கம் ''மழலைப் பட்டாளம்''...... மன்னிக்கவும்! லக்ஷ்மியே இது ''கட்டா மீட்டாவின் தமிழாக்கமல்ல, அந்தக் கதையின் கரு எங்களிடம் ஏற்படுத்திய ஓர் உணர்வைத்தான் நாங்கள் எடுத்து ''மழலைப் பட்டாள''மாக உருவாக்கி வருகிறோம்'' என்று கூறுகிறார். இப்படிச் சொல்வது இவர் மட்டுமல்ல! ''கட்டா மீட்டா'' வை எடுத்த பாசு சட்டர்ஜி கூட ''நான் டர்க்கி தேசத்து நகைச்சுவைப் படத்தைக் காப்பி யடிக்கவில்லை. அதனல் ஏற்பட்ட உணர் வைத்தான் ''கட்டா மீட்டா'' என்ற பட மாக உருவாக்கினேன்'' என்கிறார்!

● ● ●

அமிதா பச்சன் தமது பிறந்த நாளை எப் படிக் கொண்டாடினர் தெரியுமா? தமது வீட்டிலுள்ள சிறிய திரை அரங்கில் ''அமர், அக்பர், ஆண்டனி''யைத் தமது குழந்தை



✖ 'மழலைப்பட்டாளம்'

களான ஸ்வேதா, அபி இருவருக்கும் போட்டுக் காண்பித்தார். கிட்டத்தட்ட அதே நிலையில் இருப்பவர்தான் தமிழகத்தைச் சேர்ந்த கே. ஆர். விஜயா. பல படங்களை இவர் தம் வீட்டுத் திரையரங்கில்தான் பார்க்கிறார்.

• • •

ரிஷிகபூர் நீதுசிங்கைத் திருமணம் செய்து கொள்ளப் போகிறார். இது பழைய செய்தி. ஆனால் சத்ருக்னன் சின்கா வரும் டிசம்பர் மாதம் 9ந் தேதி திருமணம் செய்து கொள்ளப் போகிறார் என்பதோ, தம் வீட்டிலேயே உள்ள பூனம் என்ற பெண்ணை மணக்கப் போகிறார்' என்பதோ பழைய செய்தியல்ல. அது சரி, அவருடன் நெருங்கியிருந்த ரீனாராயின் கதி? அவருக்கே தெரியாதே!

• • •

சினிமா கேக்கை ரகசியமாகத் தின்பது எப்படி? அந்தக் கலையில் வல்லவர்களான சுதாகர் — ராதிகாவைத்தான் கேட்க வேண்டும்! படத்தில் பிறந்த நாள் விழா என்று வந்துவிட்டால் போதும், இந்த இருவருக்கும் கொண்டாட்டம். காட்சிக்காகப் பிறந்த நாள் கேக் பெரியதாகத் தயாரித்து வைத்திருப்பார்கள் அல்லவா? போகும்போதும் வரும்போதும் ஒவ்வொரு விள்ளலாக வாயில் போட்டுக் கொள்வது இந்த ஜோடிக்கு வழக்கம். காட்சியிலுள்ள கேக்கை இப்படிப் பிட்டுப் பிட்டு வாயில் போட்டுக்கொண்டால் எப்படி? காட்சிக்கு முழுமையான கேக் தேவையில்லையா? அதனால் ரகசிய வழி ஒன்று கண்டுபிடித்திருக்கிறார்கள். எந்தப் பக்கமிருந்து காமிரா இயங்கப் போகிறதோ அதற்கு எதிர் பக்கத்துக் கேக் பகுதியை அடிவாரத்திலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக எடுத்துக் கொள்ள வேண்டும்! காட்சி முடிந்து கேக்கைத் திருப்பிப் பார்த்தால் பாதிக்கு மேல் கபளீகரம் ஆகியிருக்கும்!




அவன் : இந்தப் படத்திற்கு இடைவேளை கிடையாதுன்னு வெளியில் அறிவிப்பு போட்டிருக்கீங்களே ஏன்?

தியேட்டர் மானேஜர் : நேற்று இடைவேளை விட்டோம்... இதுதான் சாக்குன்னு எல்லோரும் வெளியில் ஓடிட்டாங்க! உ. ராஜாஜி

✖ சுமித்ரா

✖ லக்ஷ்மி டைரக்ட் செய்கிறார்




தூண்டில்லே சிக்கிக்காம
ஜாக்கிரதையா இருக்கணும்!


ரயில்வே ஊழியர்களைப் போலவே, தபால் தந்தி, பாதுகாப்புப் படை ஊழியர்களுக்கும் போனஸ் கொடுக்கத் தீர்மானிச்சுட்டேன்!
சும்மா அள்ளி வுடுங்க.. அடுத்தாப் பலே வர்றவன் தானே அவஸ்தைப் படப் போறான்!


பெர்-ர்-ர்-ரிய்ய அகில இந்தியக் கட்சிக்காரங்க... வந்துட்டாங்க! தொகுதி உடன்பாட்டுக்கு!
தி.மு.க தேர்தல் அலுவலகம்
இ. காங்கிரஸ்
உடன்பிறப்பு
அ.தி.அ.தி.மு.க தேர்தல் அலுவலகம்
ரத்தத்தின் ரத்தம்




# கல்கி

1979 நவம்பர் 25
சித்தார்த்தி கார்த்திகை 9
மலர்: 38 இதழ்: 17




தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# சஞ்சய் ராஜ்யம்!

**சு**ப்ரீம் கோர்ட் பிரதம நீதிபதி சந்திரசூட் அச்சமின்றி, தயக்கமின்றி வழக்கறிஞர் சர்மாவைக் கண்டித்ததன் மூலம் ஓர் அரிய பணியாற்றியுள்ளார். தேசத்தின் தலைமை நீதிமன்றத்தின் கௌரவத்தை அவர் நிலைநாட்டியது ஒரு புறமிருக்க, இந்திரா காந்தி மறுபடியும் பதவிக்கு வந்தால் ஆட்சி எப்படி இருக்கும் என்பதற்கு நமக்கு ஒரு முன் உதாரணம் கிட்டி இருக்கிறது.

சந்திரசூடின் காரியதரிசியைச் சந்தித்து சர்மா, ''பிரதம நீதிபதி இன்று நீதிமன்றத்துக்குப் போகும்போது ஜாக்கிரதையாக இருக்கட்டும்!'' என்று எச்சரித்தார். பின்னர் சந்திரசூடின் வீட்டுக்குச் சென்று அவரையே நேரில் சந்தித்து அதே போல் பயமுறுத்தினார்!

இதை வெளியிட்ட சந்திரசூட், ''இம்மாதிரியான மிரட்டல்கள் என்னைக் கோழையாக்கி விடாது; நடு நிலைமையிலிருந்து என்னை அசைத்து விடாது; சட்டம் நீதித் துறையின் தூய்மையையும் தலைமை நீதிமன்றத்தின் மேன்மையையும் நிலை நாட்ட விரும்புகிறேன்'' என்று கூறியுள்ளார்.

இந்திரா – சஞ்சய்யின் சர்வாதிகாரப் போக்கு சற்றும் மாறவில்லை என்பதையும் 'மறுபடி எமர்ஜென்ஸி கொண்டு வரமாட்டேன்' என்று கூட்டத்துக்குக் கூட்டம் இந்திரா சாது வேடம் போட்டு சத்தியம் பண்ணுவதெல்லாம் வெறும் பித்தலாட்டம் என்பதையும் இந்த நிகழ்ச்சியிலிருந்தேனும் மக்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

அதிகார பலம் பெற்றிருப்பவர்கள் மக்களுக்குத் துன்பம் விளைவிப்பதென்றால் எமர்ஜென்ஸி கொண்டு வந்துதான் செய்ய வேண்டுமென்பதில்லை. இல்லாமலும் வேண்டியவர்களுக்குச் சலுகை வழங்கலாம்; வேண்டாதவர்களை ஹிம்சிக்கலாம். நாடாளுமன்றத்தில் மிகப் பெரும்பான்மை பெற்று விட்டாலோ அரசியல் சாசனத்தை இஷ்டப்பட்டபடியெல்லாம் மாற்றி, தம்மைக் குற்றச் சாட்டுகளுக்கு அப்பாற்பட்டவராக்கிக் கொள்வதுடன் நமது ஆட்சியை நிரந்தரமாக்கிக் கொள்ளவும் வழி வகுக்கலாம்.

'கிஸ்ஸா குர்ஸிகா' வழக்கு காரணமாக சஞ்சய் தேர்தலுக்கு நிற்க முடியாது என்று கூறப்படுகிறது. அவர் தேர்தலில் நின்று நாடாளுமன்ற உறுப்பினர் ஆக வேண்டும் என்பது கூட இல்லை. பிரதமரின் மகன் என்ற செல்வாக்கே போதும், அவரது அடாவடித்தனங்கள் அமர்க்களப்படும்.

'சர்மா செய்த காரியத்துக்கு இந்திரா – சஞ்சய் எப்படிப் பொறுப்பாக முடியும்?' என்று கேட்கலாம். மேல் மட்டத்திலிருக்கும் தலைவர்கள் நடந்து கொள்ளும் போக்கை அனுசரித்துத்தான் கீழே உள்ளவர்கள் தங்கள் நடத்தையை வகுத்துக் கொள்கிறார்கள். இல்லாத போனால் சந்திரசூடிடம் இப்படி நடந்து கொள்ளும் துணிவு சர்மாவுக்கு எப்படி வரும்?

''ஆணவம்மிக்க ஒரு ஜனநாயகத் தலைவரை விட கருணை உள்ளவரான ஒரு சர்வாதிகாரி மேல்!'' என்று ஒரு சமயம் ராஜாஜி கூறினார். இந்திராவும் சஞ்சய்யும் ஆணவப் போக்குடன் சர்வாதிகார மனப்பான்மையும் கொண்டவர்கள். கருணையற்றவர்கள் என்பதை நெருக்கடி காலக் கொடுமைகளும் அவற்றை அவர்கள் இன்னமும் நியாயப்படுத்தவே பார்ப்பதும் உணர்த்தும். அவர்களுக்கு ஜனநாயகம் ஒரு வெளி வேஷமாக மட்டுமே இருக்க முடியும்.



# மீண்டும்...

ஜயேந்திரன்

கதவைத் திறந்து கொண்டு சொட்டச் சொட்டக் கட்டிய நைலக்ஸ் புடவையோடு வெளியே வந்த பானு, கையில் பிரஷ்ஷுடன் நிற்கும் ஜகனைப் பார்த்துவிட்டு, சட்டென்று கண்களைத் தாழ்த்திக் கொண்டு வேகமாக நடந்தாள். அவள் பாதம் தரையில் வரைந்த அந்த ஈர பிம்பங்களையே வெறித்திருந்தான் ஜகன்.

அப்படி என்னதான் நடந்து விட்டது?

ஜகனுக்கும், பானுவுக்கும் கல்யாணம் ஆகிச் சரியாக இரண்டு மாதங்கள்தான் ஆகியிருக்கும். இரண்டு பேருமே கல்யாணத்துக்காக ஒரு மாதத்துக்கு மேலேயே ஆபீஸில் லீவு எடுத்திருந்தார்கள். கல்யாணம் ஆன புதிதில் வேண்டுதல்கள், விருந்து அழைப்புக்கள் என்று ஒரு மாதம் ஓடிவிட்டது. மீதமிருந்த நாட்களில் இருவரும் ஹனிமூனுக்காகக் காஷ்மீர் சென்று வந்தனர். எழில் நகரமாம் காஷ்மீரில், தம்பதிகள் இருவரும் அன்புச் சாகரத்தை அனுபவித்துப் பேரானந்தம் அடைந்திருந்தனர்.

சென்னைக்குத் திரும்பி ஒரு வாரம்தான் ஆகியிருந்தது. இருவரும் சென்னை திரும்பிய உடனேயே ஆபீஸில் வேலைக்குச் சேர்ந்து விட்டனர்.

இந்த ஒரு வாரமாய்த் தினமும் பீச், சினிமா, நாடகம் என்று இன்பமாய்ப் பொழுது கழிந்தது இருவருக்கும்.

நேற்று இரவு மெரினா பீச்சில் இருந்து வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தபோது பானு மெதுவாக, ''எங்க ஆபீஸில் என்னோட வேலை செய்யற ஒருத்தர் பம்பாய் போகப் போறார். நல்ல 'ஸாரி' ஒண்ணு வாங்கிட்டு வரேன்னார். விலை நூத்தைம்பது ரூபாய் இருக்கும்....'' என்று இழுத்தாள்.

அதற்கு ஜகன், ''பானு... அப்பாவுக்கு உடம்பு சரியில்லையாம். மருந்து வாங்கப் பணம் வேணும்னு ஊர்லேந்து லெட்டர் வந்திருக்கு. இப்ப வேணும். அப்புறம் வாங்கிக்கலாமே'' என்றான்.

பானுவின் முகம் கருங்கிப் போய்விட்டது. ஜகனுக்கு என்னவோ போலாயிற்று. பேச்சை மாற்ற ஜகன், ''பானு நீ கேட்டியே கமல ஹாஸன் படத்துக்குப் போகணும்னு. டிக்கட் கிடைக்கல்லே. ஒரு நல்ல இந்திப் படத்துக்கு...''என்று டிக்கட்டைக்காண்பித்தான்.

அவன் சொன்னது மேலும் ஏமாற்றமாய்ப் போய்விட்டது பானுவுக்கு. முகத்தைத் திருப்பிக் கொண்டு விட்டாள். வீடு வரும் வரை அவனைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

அடிக்கொரு தரம் அன்பாய் அவன் கரம் பற்றி ''ஏங்க'', ''ஏங்க'' என்று செல்லமாய்ச் சிணுங்குவதும், அர்த்தமற்ற ஆயிரம் கேள்விகளைக் கேட்டு, அதற்கான பொறுமையான அவன் பதில்களுக்கு அவள் தலையாட்டுவதும், விதம் விதமாய் ஆசையோடு அவனுக்குச் சமைத்துப் போடுவதும், அவனை முழுவதுமாய் வியாபித்திருந்தவளுமான பானு ஒரேயடியாய்த் தன்னைப் புறக்கணித்தது பிடிக்கவில்லை ஜகனுக்கு. இந்த வயசிலேயே இவ்வளவு வீறாப்பா என்று வெறுத்துப் போயிற்று அவனுக்கு.

அன்று இரவு இரண்டு பேருமே பட்டினி. படுக்கையறையில் தனியாய்க் கட்டிலில் படுத்துத் தலையணையில் முகம் புதைத்து அழலானாள் பானு. தன்னிலே ஐக்கியமான ஜகன், தன்னுடைய ஆசைகளைப் புறக்கணித்து அவளுக்கு ஏமாற்றத்தை அளித்தது. எவ்வளவு நேரம் அழுதாளோ தெரியாது. தூங்கிப் போய்விட்டிருந்தாள். ●●

கூடத்தில் ஒரு பாயை விரித்துப் படுத்த ஜகனுக்குத் தூக்கமே வரவில்லை. அவள் விசித்தழுவது இலேசாக அவனுக்குக் கேட்டது. பாவம் என்று போய்ச் சமாதானப் படுத்தலாமா என்று கூடத் தோன்றியது அவனுக்கு. ''இருந்தும் இவ்வளவு சின்ன வயசிலேயே இவ்வளவு கோபமா? நான் என்ன தப்பாச் சொல்லிவிட்டேன்? எல்லாம் தானாக அடங்கட்டும்.'' கோபத்தோடு புரண்டு படுத்தான். தூங்கியேவிட்டான் அவனும். ●●

காலையில் ஒரு கப் காப்பியாவது கிடைக்குமா வென்று பார்த்தான் ஜகன். ஹூம் வழியேயில்லை. 'இவ்வளவு கோபமா? என்ன துர்வாசர் பரம்பரையோ?'

தலையை வாரிக் கொண்டு, பவுடர் மணம் கமழ, கையில் பையுடன் கிளம்பிவிட்டாள் பானு. தினமும் 'போய் வரட்டுமா', 'போய் வரட்டுமா' என்று போக மனமில்லாமல் வாசலிலேயே நிற்கும் இவள், சொல்லிக்கொள்ளாமலேயே கிளம்புகிறாளே என்ன திமிர்? — தோட்டத்துக்குப் போய் நின்று கொண்டான் ஜகன்,

பானு போய்விட்ட பிறகு குளித்துவிட்டு, டிரஸ் செய்து கொண்டு, வீட்டைப் பூட்டிச் சாவியைப் பக்கத்து வீட்டில் கொடுத்துவிட்டு, போகும் வழியில் உடுப்பி ஹோட்டலில் காப்பி, டிபன் சாப்பிட்டுவிட்டு ஆபீஸ் போய்ச் சேர்ந்தான் ஜகன். ●●

பானுவுக்கு மனம் ஆபீஸ் வேலையில் லயிக்கவே இல்லை. தப்புத் தப்பாய் 'டைப்' அடித்துக் கொண்டிருந்தாள். மானேஜர் வேறு ''ஸ்டேட்மெண்ட் அடித்தாயிற்றா?'' என்று கேட்டுக் கொண்டிருந்தார்.

''ஹூம். எப்படி யெல்லாமோ கனவு கண்டேன். ஒரு சின்ன ஆசையைக் கூட நிறைவேற்ற முடியலே. பிறந்த வீட்டிலே தான் கஷ்டப்பட்டோம். இப்பவாவது ஜாலியா லைஃபை 'என்ஜாய்' பண்ணலாம்னு ஆயிரம் கோட்டை கட்டினேன்? இங்கேயும்_எனக்கு அதிர்ஷ்டம் இல்லே. சம்பாதிச்சு என்ன பிரயோசனம்? ஒரு புடவை வாங்கிக்கக்கூடப் பர்மிஷன் வாங்கணும். எனக்குப் பிடித்த படம் கூடப் பார்க்க முடியலே'' பொங்கிப் பொங்கி வந்தது அவளுக்கு. குமுறிக் குமுறி அழலானாள்.

மானேஜர் கூப்பிடுகிறார் என்றவுடன், கண்களில் வழியும் நீரைத் துடைத்துக் கொண்டு உள்ளே போனாள் பானு. 'ஸ்டேட்மெண்ட்'டில் இருந்த பிழைகள் வேறு அவளுக்கு எதிரியாயின. கத்த ஆரம்பித்து விட்டார் மானேஜர். ஏற்கனவே வெதும்பிப்போயிருந்தவள், 'ஓ'வென்று அழவே ஆரம்பித்துவிட்டாள். ●●

எதிலேயும் லயிக்கவில்லை ஜகனுக்கு. ஃபைல்கள் குவிந்திருந்தன.

''அவசரப்பட்டு இவளைத் தேர்ந்தெடுத்து விட்டோமோ? நம்முடைய குடும்பத்தின் கஷ்ட நஷ்டங்களைப் பற்றியே கவலைப்படாமல், ஆடம்பரமாக இருக்க வேண்டுமென்று நினைக்கிறாளே, அப்பப்பா, மூக்கு நுனியில் கோபம் ரெடியாய் நிற்கிறதே. அத்தை மகள் மாலாவை, வேண்டாமென்று ஒதுக்கி விட்டது தவறாகப் போய்விடுமோ? — வாழ்க்கையே நிம்மதி இல்லாமல் போய் விடுமோ'' — பலவாறு எண்ணியவாறிருந் தான் ஜகன். ●●

மனம் அலைபாய்ந்தது ஜகனுக்கு. பானு தன் வாழ்வில் குறுக்கிட்டவுடனேயே அவள் அன்புக் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நிறுத்தி வைத்திருந்த சிகரெட் பழக்கத்துக்கு மறு படியும் திரும்ப வைத்தது அவன் உள்ளம். பாக்கெட் சிகரெட்டை வாங்கி ஊதித் தள்ளி னான் ஜகன்.

லஞ்ச் டைம். எல்லாப் பெண்களும் லேடீஸ் ரூமில் கூடியிருந்தார்கள். பானு மட்டும் ஸீட்டிலேயே அமர்ந்து, மனம் லயிக்கா



மல், ஏதோ வாரப் பத்திரிகையைப் புரட்டியவாறு இருந்தாள். வயிறு கூவிற்று. பியூன் வேலு வாங்கிக் கொண்டு வந்திருந்த பொட்டலத்தைப் பிரித்தாள்.

உருளைக் கிழங்கு போண்டா; அவள் மனம் மெல்ல இளகியது. ஜகனுக்கு இது ரொம்பவும் பிடிக்கும். எப்படி ஆசை ஆசையாய்க் கேட்டுச் சாப்பிடுவார். இவ்வளவு நேரமாய் அவன் மேல் இருந்த கோபம் தணிய ஆரம்பித்தது. அதுவும் அவனைப் பற்றிய நினைவு வந்ததும், தன்னையே நொந்துகொள்ள ஆரம்பித்தாள் அவள்.

''இந்தச் சின்ன விஷயத்துக்காக நான் ஏன் இவ்வளவு கோபப்படறேன்? அவர் என்ன சொல்லிவிட்டார் அப்படி? ஏதோ செலவு இருப்பதாலே புடவை அப்புறம் வாங்கிக்கலாம் என்றார். அந்தக் குறிப்பிட்ட படத்துக்கு டிக்கட் கிடைக்கலேன்னு அவர் என்ன பண்ணுவார்? இதற்காகவெல்லாம் இவ்வளவு வெறுப்பு எனக்கு ஏன் வருகிறது? சே.... நான் ரொம்ப மோசம்'' — தன்னையே நொந்துகொண்டாள் பானு. ●●

ஏதோ யோசனையில் சிகரெட் நுனியை விரல்களால் தட்டிய ஜகன், விரல் சுட்டுவிடவே 'ஆ' என்று வாய் விட்டே கத்திவிட்டான். அதுவரை காலையிலிருந்து இரண்டு பாக்கெட்டுகள் ஊதித் தள்ளிவிட்டான். வெறியாய் அந்தப் புகைகள் அத்தனையும் அவனுள் போய் வெளி வந்ததுமே அவன் கோபம் சற்றே தணியலாயிற்று. கல்யாணமான புதிதில் ஒரு நாள் ஜகன் சிகரெட் பிடிப்பதைப் பார்த்துவிட்ட பானு, ''இதுவரைக்கும் உங்களைக் கவனிக்க, கண்டிக்க ஆள் இல்லே. இனிமேலே நீங்க உங்களுக்கு மட்டும் சொந்தமில்லே. எனக்கும்தான். சிகரெட் பிடிக்கிறதுனாலே, நீங்க மட்டுமில்லே, நானும் பாதிக்கப்படறேன்'' பெரிய மனுஷியாய்ப் பேசினாள். அன்று சிகரெட் பிடிப்பதை நிறுத்தியவன் தான்.

பானுவின் நினைப்பு வந்ததும், ஒரேயடியாய்க் கோபம் மறைந்தே போயிற்று. ''சின்ன வயதுதானே, கல்யாணமானவுடன் கணவனோடு கனவு கண்டவற்றையெல்லாம் அனுபவிக்க வேண்டும் என்ற ஆசை. அந்த ஆசைக்கு ஒரு சிறிய குறுக்கீடு வந்ததும் கோபம் வந்து விட்டது அவளுக்கு. நல்லது சொல்லி அவளைச் சமாதானப்படுத்துவதை விட்டு விட்டு நானும் முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டது தவறுதான்''—அவள் மேல் அனுதாபம் உண்டாயிற்று அவனுக்கு. 'சாப்பிட்டாளோ இல்லையோ? முதலில் அவளுடைய பிடிவாத குணத்தை மெல்ல மெல்ல மாற்றணும். சூதுவாது இல்லாத அப்பாவி. இப்போது ஃபீல் பண்ணிக் கொண்டிருப்பாள்.' எண்ணினான் அவன். . ●●

ஆபிஸை விட்டு வெளியே வந்ததும், பழக்காரன், கூடையில் பன்னீர் திராட்சையோடு உட்கார்ந்திருந்தான். 'பன்னீர் திராட்சை' அவருக்கு ரொம்பப் பிடிக்குமே என்று ஐந்து ரூபாய் நோட்டை எடுத்தாள் பானு.. ●●

ரயில்வே ஸ்டேஷன் வாசலில் ''சாமி, நல்ல ஜாதி முல்லைங்க'' வழிமறித்தாள் ஒரு சின்னப் பெண்.

''ஓ! மல்லிகைப்பூன்னா பானுவுக்கு உயிராச்சே'' — ஐந்து முழம் பூவையும் சென்டாய் எடுத்து வாசனை பார்த்தான் ஜகன். ●●

''பானு'' என்று அழைத்தவாறே, உள்ளே நுழைந்தான் ஜகன்.

எதிரே வந்து நின்றாள்.

அத்தனை மணி நேரமாய் அவர்கள் மனங்களின் பிரிவிலிருந்து விடுபட்டு, மீண்டும் ஒன்றிவிட்டபோது ஏதோ யுகங்களாய்ப் பிரிந்தவர்கள் கூடின மாதிரி இருந்தது.

புச்சரத்தை நீட்டினான் ஜகன். அவனுடைய மார்பில் சாய்ந்து கொண்டு அழ ஆரம்பித்துவிட்டாள் பானு. அவன் அவள் முதுகில் செல்லமாய்த் தட்டி அவளைச் சமாதானம் செய்தான்.

''என்னை மன்னிச்சுடுங்க. நான் அவ்வளவு கோபப்பட்டிருக்கக் கூடாது, என் தப்புத்தான்.''

''இல்லே பானு. நீ கேட்டது என்ன? புடவையும் சினிமாவும்தானே? நானும் அட்ஜஸ்ட் செய்திருக்கலாம்.''

''நோ நோ... உங்களுக்குப் பிராப்ளம் இருக்கும்போது அது புரிஞ்சுக்காம, நான் பிடிவாதம் பிடிக்கிறது தப்புத்தான்.''

''பரவாயில்லே. அதுக்காக வருத்தப்படாதே. 'லெட் த பாஸ்ட் பீ பாஸ்ட்' புடவைக்காக பம்பாய் போகிறவங்க கிட்டச் சொல்லிடு. இந்தா ரூபாய். கமலஹாசன் படத்துக்குக்கூட இப்பவே வா கிளம்பலாம்.''

''வேண்டாங்க. எதுவுமே எனக்கு வேண்டாம். நீங்கதான் எனக்கு வேண்டும். இந்தாங்க உங்களுக்குப் பிடித்த பன்னீர் திராட்சை....''

அந்தச் சில மணி நேரப் பிரிவு, அவர்கள் இருவருக்கும் கணவன் — மனைவி பந்தத்தின் ஆழத்தை, அர்த்தத்தை முதல் முறையாக உணர்த்திவிட்டிருந்தது.

புயலுக்குப் பின் மீண்டும் அங்கே வசந்தம் வந்து புதிதாய்ப் பிறந்திருந்தது.




கடைக்காரர் : ரேடியோவை மூடடா! அந்தப் பழரசம் கேட்கப் போறாங்கோ! —ஸ்ரீதா

## செல்வராஜைச் சந்தியுங்கள்!

தொழில் டிப்ளமா பெற்ற வெ. செல்வராஜ் சென்னையில் சொந்தமாக ஒரு சிறு தொழிற்கூடம் நடத்தி வருகிறார். இந்த இளைஞருக்கு ஏற்படும் பிரச்னைகள் ஏராளம். அவர் கூறுகிறார்:

''கிண்டியில் உள்ள மத்திய அரசின் சிறு தொழில் சேவை நிலையம், இந்தத் தொழிலில் ஈடுபடும் இளைஞர்களுக்கு, அவர்களுக்குப் பிடித்தமான சிறு தொழிலில் பயிற்சி அளிப்பது உண்மையே. இந்த மூன்று மாதப் பயிற்சி முடிந்த பிறகு லைசென்சு, மற்றும் வங்கி உதவியையும் இவர்களுக்குக் கிடைக்கச் செய்கிறார்கள்.

''ஆனால் ஏட்டளவில் அளிக்கும் வாக்குறுதிக்கும் நடைமுறைக்கும் இடையில் ரொம்பவும் வேறுபாடு உள்ளது. வேலை இல்லாத் திண்டாட்டத்தைப் போக்க வேண்டும் என்று அறிக்கைகளுக்கு மேல் அறிக்கை விடும் அரசியல் தலைவர்களோ, இல்லை அரசோ எங்களுக்கு ஊக்கமளிப்பதில்லை. சிறு தொழில் லைசென்சு கொடுக்கக் காலதாமதம் செய்வதால் பலருக்கு அலுப்பு ஏற்பட்டுச் சந்தேகமே ஏற்படுகிறது. எங்களுக்குத் தேவைப்படும் மூலப் பொருள்களும் தேவையான அளவு கிடைப்பதில்லை. அப்படியே கிடைத்தாலும் அதிக விலைக்கு வாங்க வேண்டியுள்ளது. சிறு தொழில் நிறுவனங்கள் தயாரிக்கும் பொருட்களை அரசு வாங்கும் என்று உறுதி அளிக்கப்பட்டாலும் உண்மையில் எங்கள் பொருட்களுக்கு ஆதரவு கிடைப்பதில்லை.

''வங்கிகள்சிறு தொழில்களுக்கு மூலதனம் வழங்குவதாக அடிக்கடி தம்பட்டம் அடித்துக்கொண்டாலும், கொடுக்கப்படும் இந்தக் குறைந்த மூலதனத்துக்குப் பல காலம் காத்திருக்க வேண்டியுள்ளது. இவ்வளவையும் தாண்டிப் போனால் வங்கிகள் எங்களிடமே ''விற்பனைக்கு என்ன உத்தரவாதம்?'' என்று கேட்பது ரொம்பவும் ஆச்சரியமாக இருக்கிறது.

''இதையெல்லாம் தாண்டித்தொழில் ஆரம்பிப்பவர்கள் ரொம்பவும் குறைவுதான்.''

## ஏ. ஸி. முத்தையா

தென்னிந்திய தொழில் வர்த்தக சபையின் நடப்பு ஆண்டுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளவர் ஏ. ஸி. முத்தையா. கூர்மையான பார்வை, சுறுசுறுப்பான எண்ணங்கள், இனிமையான பேச்சு, இவற்றின் மொத்த உருவமாக விளங்குபவர் தொழிலதிபர் ஏ. ஸி. முத்தையா SPIC நிறுவனத்தின் துணைத்தலைவரான இவர்கூறுகிறார்.

''எங்கள் குடும்பத்தினர் பரம்பரையாக வியாபாரத்தில் ஈடுபட்டு வந்துள்ளவர்கள். ஆரம்ப காலத்தில் என் முன்னோர்கள் கடனுதவி செய்து தொழில் நடத்தினார்கள். எனக்குச் சிறு வயதிலேயே வியாபாரத்தில் நாட்டம் ஏற்பட்டுவிட்டது. உழைப்பை வெளிக்காட்ட வாய்ப்புக்களை எதிர்பார்த்து வந்தேன். எந்தப் பொருளைப் பார்த்தாலும் அதன் மூலம் வேறு என்ன உருவாக்க முடியும் என்பதை ஆழ்ந்து சிந்திப்பேன்.

திரு ஏ. ஸி. முத்தையா

''ஸ்பிக்(Spic) நிறுவனம் உருவாகிய தினம் தான் என் வாழ்நாளில் ஒரு பொன்னாள். மறக்க முடியாத நாள்.

''தமிழகத்தைப் பொறுத்த மட்டில் தொழில் உற்பத்தி கணிசமான முறையில் பெருகியுள்ளது. ஆனால் பெரும் மூலதனம் கொண்ட நிறுவனங்கள் (Large Industries) இங்கு அவ்வளவாக இல்லாதது சற்று வருத்தமாகத்தான் இருக்கிறது. அவை பெரும்பாலும் குஜராத் மாநிலத்திலேயே அமைக்கப் பட்டுள்ளன.

''இங்கு கனரகத் தொழில் கூடங்கள் அதிகம் ஏற்படத் தேவையான வசதிகளை அரசின் பண உதவிக் கூடங்கள் (Financial Institutions) செய்து கொடுத்து ஊக்குவிக்க வேண்டும்.

''நம்மிடம் தொழில் நிபுணர்கள் அதிகம் உள்ளார்கள். வேலை தெரிந்த திறமை மிக்க ஊழியர்கள் உள்ளனர். தொழிலகங்கள் எழத் தேவையான நிலப் பரப்பும் இங்கு விலை குறைவுதான். மின் உற்பத்தி கணிசமாக அதிகரித்தால் தமிழகம் தொழில் துறையில் முன்னேற நிறைய வாய்ப்பிருக்கிறது. தென்னிந்திய தொழில் வர்த்தக சபை, வியாபாரிகளுக்கும் அரசுக்கும் நடுவே ஒரு பாலமாக உள்ளது. தொழிலதிபர்கள் வியாபாரிகளின் பிரச்னைகளை நாங்கள் அரசுக்குத் தெரிவிக்கிறோம்.

''எந்தத் தொழிலதிபரானாலும் அவர் முன்னேற்றத்தின் ரகசியம் என்ன என்று கேட்டால், தன்னம்பிக்கை, விடா முயற்சி, சலியாத உழைப்பு என்பவையாகத்தான் இருக்க முடியும்'' என்று மென்சிரிப்போடு கூறும் இந்த இளைஞருக்குப் பிடித்தமான பொழுது போக்கு போலோ ஆட்டம்.

FOCUS

திரு. செல்வராஜ்

FOCUS

## குலபதி பால கிருஷ்ண ஜோஷி

"ஓர் உண்மையான ஆசிரியன், பணமில்லாவிடினும் செல்வந்தனாவான். அவனுடைய செல்வ நிலையை வங்கியில் இருக்கும் பணத்தால் கணிக்கக் கூடாது. அவன் தனது மாணவர்களிடம் தோற்றுவிக்கும் அன்பினாலேயும், விசுவாசத்தினாலேயும்தான் முடிவு செய்ய வேண்டும்." — கூறியவர் குலபதி எஸ். பால கிருஷ்ண ஜோஷி. சொல்லைச் செயலாக்கியும் காட்டியவர் இவர்.

ஜனாதிபதி விருதை இவர் பெற்றதைப் பாராட்டும் விதமாக அப்போதைய தமிழக முதல்வர் பக்தவத்சலம் அவர்கள் ரூ. 25000 பரிசாக அளித்தபோது, அப் பணத்துடன் தமது சொந்தப் பணம் கொஞ்சமும் சேர்த்துத் தமது பள்ளிக்கு நன்கொடையாக அளித்துவிட்டார்.

கல்விப் பணிக்காகத் தமது ஒவ்வொரு நொடியையும் அர்ப்பணித்துச் செயலாற்றி



⌘ குலபதி ஜோஷி

வரும் இவர் இப்பணியில் ஐம்பதாண்டுகளைச் சமீபத்தில் பூர்த்தி செய்திருக்கிறார்.

இம்மாதிரி சேவைக்காகப் பாராட்டுவிழா நிகழ்த்தும் சமயம் சேவை செய்தவருக்குப் பண முடிப்பு அளித்துக் கௌரவிப்பது வழக்கம். ஆனால் திரு ஜோஷியின் இயல்பு அறிந்த இவரது முன்னாள் மாணவர்களும், இவருடன் பணியாற்றிய ஆசிரியர்களும் நண்பர்களும் இணைந்து, இவர்பெயரால் கல்வித் துறைக்குப் பயன்படும் அறக்கட்டளையொன்றைத் தொடங்கியுள்ளனர். தாம் படித்து, அங்கேயே ஆசிரியராகி, தலைமை ஆசிரியராகிக் கல்விப் பணி புரிந்த ஹிந்து தியலாஜிகல் உயர்நிலைப் பள்ளி தவிர ஜோஷியின் முயற்சியால் சிறந்தோங்கிய கல்விக் கூடங்கள் பல.

## ஆங்கில தியேட்டரில் தமிழ்ப் படம்:

இந்த ஆண்டிலிருந்து, ஒவ்வொரு தியேட்டரும் வருடத்துக்குப் பன்னிரண்டு வாரங்கள் தமிழ் மொழிப் படங்கள் கண்டிப்பாகத் திரையிட வேண்டும் என்று தமிழக அரசு சட்டம் கொண்டு வந்துள்ளது.

இதைப் பற்றி ஆங்கிலப் படங்கள் மட்டுமே திரையிடும் காஸினோ தியேட்டரின் மானேஜர் திரு என். ஒய். சிங் கூறுகிறார்:

"காஸினோ என்றாலே ஆங்கிலப் படம் என்பது சென்னை ரசிகர்களுக்குத் தெரியும். இந்த சட்டத்தில் பல பிரச்னைகள். ஜனவரி 1979, இந்த சட்டம் கொண்டு வரப்பட்டது. இருந்தாலும், நாங்கள் வெளிநாட்டு திரைப்படம் தயாரிக்கும் நிறுவனங்கள் பாரமவுண்ட், யூனிவர்ஸல், போன்றவைகளுடன் 1979ம் ஆண்டு முடிய அவர்கள் திரைப்படங்களைத் திரையிடுவதாக முன்னமே ஒப்பந்தம் செய்து கொண்டோம். இதனால் இந்த ஆண்டு தமிழ்ப் படங்களைத் திரையிடுவது முடியாத காரியம் என்றும் இந்த நிபந்தனையை அடுத்த ஆண்டு தொடக்கத்தில் அமல் படுத்தலாம் என்றும் தெரிவித்துக் கொண்டோம். அரசு முதலில் மறுத்தாலும், பிறகு சலுகை அளிக்கப்பட்டது.

"தமிழ் படங்களைத் திரையிடுவதின் காரணமாக, இதுவரை நாங்கள் இங்கு பார்க்காத கள்ள மார்க்கெட், போன்ற விரும்பத்தகாத சம்பவங்களும் ஏற்படும் என்பது உறுதி. மேலும் ஆங்கிலப்படங்களைப் போல் தமிழ்ப் படங்கள் ஓடுவதில்லை.

"தமிழ்ப் படங்களின் தரம் ரொம்பவும் குறைந்துள்ளது. திரையிடும்போதே நாட்களை எண்ணிக் கொள்ள வேண்டியுள்ளது. இதற்குமாறாகத் தற்போது ஓடிக் கொண்டிருக்கும் ஏர்போர்ட்-77 சக்கைபோடு போடுகிறது.

"ஆங்கிலப்படம் பார்க்க வருபவர்கள் ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்கிறார்கள். ஆனால் தமிழ்ப் படம் போடுவதால் அரங்கத்தில் குப்பைக் கூளம் சேரும். "காஸினோ"வின் நற்பெயர், நிலைத்திருக்குமா என்பதே கேள்விக் குறிதான்".

பேட்டி: **"சிக்கி, ரங்கா"**

⌘ என். ஒய். சிங்



நீங்காத நினைவுகள்



# பேசும் எழுத்து!

மீ.ப.சோமு

சில நாட்களுக்கு முன்பு நூற்றாண்டு விழாவைக் கொண்டாடினோமே நாவலர் சோமசுந்தர பாரதியார், அவர் தூத்துக்குடியிலும் பின்னர் மதுரையிலும் வழக்கறிஞராக இருந்ததோடு, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறைத் தலைவராகவும் பதவி வகித்தவர். ஆழமான புலமையும், அனல் வீசுகிற வாதத் திறமையும் நிரம்பியவர். இலக்கியத் துறையில் கட்சி பேசினார் என்றால், கச்சை கட்டி நின்று போராடுவார்! பக்தி அதிகமா அல்லது பயம் அதிகமா என்று சொல்ல முடியாதபடி அவரிடத்தில் மற்ற எல்லாருக்கும் பய பக்தி உண்டு!

திருச்சியில் நான் இருந்தபோது அவருடன் நெருங்கிய தொடர்பு எனக்கு ஏற்பட்டது. அங்கே வரும்போது பலமுறை என்னுடன் தங்கியிருக்கிறார்.

ஒரு சமயம் திருச்சி ரேடியோவில் திருக்குறளைப் பற்றி மூன்று தொடர் சொற்பொழிவுகள் அவர் நிகழ்த்த வேண்டும் என்று அழைக்கப்பட்டார். பொதுவாக அவர் மேடைகளில் எழுந்து பேசும்போது மிகவும் சரளமாகப் பேசுவார். அம்பு பாய்வது போல் இருக்கும் அவருடைய பேச்சு. ஆனால் அவருடைய எழுத்துத் தமிழ் அப்படி இராது. பல கருத்துக்களைச் சில சொற்களில் திணித்து ஒரு செறிவும் அதனால் உண்டாகிற கடினமும் அவருடைய எழுத்து நடையிலே காணலாம்.

முதலாவது சொற்பொழிவைக் கட்டுரையாக எழுதிக் கொண்டுவந்து அதைப் படித்து ஒலிப்பதிவு செய்தார். மற்ற இரண்டு பேச்சுக்களுக்கும் அந்தந்த வாரம் வருவதாகச் சொன்னார்.

''நீங்கள் டி. கே. சி. கட்சி! பேசுவது போல் எழுத வேண்டும் என்று கூறுவீர்கள். நான் அதற்கு மாறுபட்டவன்! என் கட்டுரை கடினமாகத்தான் இருக்கும். அப்படித்தானே?'' என்று என்னிடம் கேட்டார். நான் உடனே பதில் சொல்லவில்லை.

''பேசுவது போல் எழுத வேண்டும் என்று சொல்கிறீர்கள்! யார் பேசுவதுபோல் எழுத வேண்டும்? பிராமணர் பேசுவது போலா அல்லது என்னைப் போன்ற தமிழன் பேசுவதுபோலா?'' என்று வேகமாகக் கேட்டார். நான் இதற்கும் பதில் சொல்லவில்லை

''ரேடியோ அதிகாரி என்ற முறையில் உங்களைக் கேட்கவில்லை. உங்கள் சொந்தக் கருத்தைச் சொல்லுங்களேன்!'' என்றார், நாவலர் பாரதியார் மறுபடியும்.

இதற்கு மேல் மௌனமாக இருந்தால் அவருக்குக் கோபம் வரும் என்று பேச ஆரம்பித்தேன்.

''பேசுகிறவர் யாரோ அவர் எப்படிப் பேசுவாரோ அப்படி எழுத வேண்டும் என்பதுதான் என் சொந்தக் கருத்து. அவரவர் பேசுகிற முறையில் அவரவர் எழுதினால் இயல்பாக இருக்கும். அதற்காகக் கொச்சையாக எழுத வேண்டும் என்பதில்லை. பேசுகிற முறை, பேசுகிற பாணி, பேசுகிற உத்தி என்று ஒன்று இருக்கிறதல்லவா, உள்ளத்திலிருந்து நேருக்கு நேராக அப்படியே சொல்லுகிற போக்கு, அதைத்தான் ''பேசுகிற மாதிரி'' என்று டி. கே. சி. குறிப்பிடுகிறார்!'' என்று சொன்னேன். அவருக்கு இது ஒப்புக்கொள்ளக் கூடியதாக இல்லை.

ஒரு மணி நேரம் கழித்து அவராகவே என்னைக் கேட்டார், ''நான் வாசித்த கட்டுரை உங்கள் லிசனர்களுக்கு விளங்குமா?'' என்று.

.''மிகவும் கூர்ந்து கேட்க வேண்டும்'' என்றேன்.

''தம்பி! உங்களிடம் ஒன்று சொல்கிறேன். வகுப்பிலாகட்டும், பொதுமேடைகளிலாகட்டும், கட்டுரை என்னும் ஏடு இல்லாமல் நான் பேசினால் வேறு மாதிரியாகத்தான் இருக்கிறது. எல்லாரும் புரிந்துகொள்கிறார்கள்'' என்று சொன்னார் பாரதி.

''அடுத்த இரண்டு பேச்சுக்களையும் கையேடு இல்லாமல் என்னைப் பார்த்துக் கொண்டே பேசுங்களேன், ஒலிப்பதிவு செய்துவிடலாம்'' என்று கூறினேன்.

சற்று யோசித்துவிட்டு, ''இன்றைக்கே அந்த இரண்டையும் பேசிவிடட்டுமா?'' என்று கேட்டார்.

''சரி'' என்றேன்.

அன்று பிற்பகல் இரண்டு சொற்பொழிவுகளையுமே கட்டுரையாக எழுதிப் படிக்காமல் வாய்மொழியாகவே பேசிவிட்டார்.

இரண்டு ஒலிப்பதிவுகளையும் போட்டுக் காட்டினேன். அவருக்கு மட்டில்லாத மகிழ்ச்சி உண்டாயிற்று.

''முதலாவது பேச்சை எழுதிப் படித்தேனே, அதையும் இப்படியே ''ஸ்க்ரிப்ட்'' இல்லாமல் பேசிவிட்டால் எப்படி இருக்கும்?'' என்று கேட்டார்.

''பேசுங்கள். ஒலிப்பதிவு செய்துவிடலாம்'' என்றேன்.

கட்டுரையைத் தூர வைத்துவிட்டு, விஷயத்தை வாய்ப்பேச்சாகவே சொன்னார். ஒலிப்பதிவு முடிந்ததும் போட்டுக் கேட்டார். அவருக்கே மகிழ்ச்சி தாளவில்லை.

''தம்பி, இது முந்தியதை விடத் தெளிவாகவும், சுற்றி வளைக்காமலும் எளிதில் புரியக் கூடியதாகவும் இருக்கிறதே''' என்றார் நாவலர்.

''இது பேசுவது போல் இருக்கிறது. அது.....''

''ஓ' டி. கே. சி. கட்சியைக் கொண்டு வருகிறீர்களா? பரவாயில்லை. கட்சி இருக்கட்டும் ஒருபுறம்! இப்போது அந்த முதலாவது ஒலிப்பதிவை மறந்துவிடுங்கள்! அதற்குப் பதில் இதையே போட்டு விடுங்கள்!'' என்றார் உறுதியோடு.

அன்றிரவு என்னோடு சாப்பிட்டுவிட்டு மதுரைக்குப் புறப்பட்டார். அப்போது சொன்னார்:

''பேசுவது போல் எழுத வேண்டும் என்ற கட்சியில் பாதி உடன்பாடு எனக்கு இப்போது! அதாவது ரேடியோவில் ஒலிபரப்புவதற்காக என்ன கட்டுரை எழுதினாலும் அதைப் பேசுவது போல்தான் எழுத வேண்டும் என்பதை ஒப்புக்கொள்கிறேன்!'' என்றார் பாரதியார். நான் சொன்னேன்:

''எழுத்து என்பதே பேச்சுக்குக் கொடுக்கப்படுகிற அச்சு வடிவம்தானே? நன்னூலார் சொல்கிறபடி மொழி என்பதே மொழிக்கு முதற் காரணமே அணுத் திரள் ஒலி....''

''நீங்கள் டி. கே. சி. கட்சியை வாதாடத் தொடங்குகிறீர்கள்! எனக்கு ரயிலுக்கு நேரமாகிவிட்டது. இன்னொரு முறை அதை ஆராய்ச்சி செய்வோம். ஏனென்றால் டி.கே. சியைப் போலவே எனக்கும் சில உறுதியான கொள்கைகள் உண்டு!''

இவ்வாறு சொல்லிவிட்டுப் புறப்பட்டார் நாவலர் சோமசுந்தர பாரதியார். இதன் பிறகு அவரை நான் சந்திக்கவில்லை. மறைந்து விட்டார். ஆனால் இரண்டொரு கடிதங்கள் எனக்கு எழுதினார். சுவையான செய்தி என்னவென்றால், அந்தக் கடிதங்கள் நேருக்கு நேர் பேசுவது போல் எழுதப்பட்டிருந்தன!











நாடக விமரிசனம்

# புது தியேட்டரின் புதிய நாடகம்

"பூர்ணம் புது தியேட்டர்" என்று பெயரில் மட்டுமல்லாது, புதுமையான முயற்சிகளில் ஈடுபடுவதன் மூலம் பூர்ணம் விசுவநாதன் தமிழ் நாடக மேடைக்குப் புத்துணர்ச்சி ஊட்டி வருகிறார் என்பதில் ஐயமில்லை. அவருக்கு சுஜாதாவின் ஒத்துழைப்பும் கிடைத்தால் கேட்க வேண்டுமா?

'பணம் யாரிடம் போய்ச் சேருகிறதோ அவன் அகங்காரம் கொண்டவனாகிறான். செல்வச் செருக்கும் அதிகார பலமும் போதையாகத் தலைக்கு ஏறுகின்றன. அவனைச் சுற்றியுள்ளவர்கள் பணம் படைத்த அவனுக்கு அடிமைகளாகிறார்கள்' என்ற மையக் கருத்து நாடகத்தில் நன்றாகப் பெறப்படுகிறது. இந்தக் கருத்தை வலியுறுத்தக் கடைசி காட்சிக்காகத் திரை தூக்க ஏற்படும் கால தாமதத்தை நாம் மன்னித்துவிட வேண்டியதுதான். உடை, மேக்கப் மாற்றங்களுக்கு இந்த அவகாசம் தேவைப்படும் தான்.

பூர்ணம் விசுவநாதனுக்கு மிடுக்கு சற்றும் குறையாத தலை நரைத்தவர் பாத்திரம். ஜமாய்க்கிறார். அவரது அனுபவ ஆற்றலுடன் கூடிய மேற்பார்வையில் மற்ற நடிகர்களும் சோபிக்கிறார்கள். நல்ல ஒத்துழைப்பைத் தருகிறார்கள். அதிலும் ராமநாதனின் முதல் தம்பியாக நடிக்கும் பலதேவ் அனாயாசமாகச் செய்திருக்கிறார். கடைசிக் காட்சியில் அடியோடு மாறிய குணசித்திரமாக மிடுக்குடன் அவர் வருவது வெகு ஜோர். கௌரிசங்கர், சுலோசனா ஆகியோரும் அமைதியான நடிப்பாற்றலை வெளிப்படுத்துகிறார்கள்.

நாடகத்தில் தம்பி மனைவியை அண்ணனே கெடுத்து விடுகிறான் என்ற பகுதி நெருடலாக இருக்கிறது. இது தொடர்பாக எழுதித் தெரிவித்ததற்கு சுஜாதா தமது பதில் கடிதத்தில் தரும் விளக்கம்:

குடும்பத்தில் அவ்வளவு பேர் மத்தியில் இருந்தும் கணவன் ரசிகத்தன்மையற்றவனாக இருப்பதால் அவள் தனிமையில் இருப்பது போலவே உணர்ந்து டயரியைத் தன் தோழியாக எண்ணி அதில் தன் உணர்ச்சிகளைக் கொட்டுகிறாள். ராமநாதனால் கெடுக்கப்பட்ட பின் குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்க உண்மைகளை ஒப்புக் கொண்டு டயரி எழுதுகிறாள். தற்கொலைக்கு முன் டயரியை அழிக்காததற்குக் காரணம் 'எப்படியும் விஷயம் எல்லாருக்கும் தெரிந்து விட்டது; இனி கணவனை எட்ட அதிக நாளாகாது' என்ற எண்ணம்.

நாடக அமைப்பில் இவற்றை எளிதாக உணர்ந்து அறிய முடியாதிருப்பதால் ஓரளவு கசப்புணர்வு ஏற்படுகிறது. ("இதற்கு பூர்ணம் பொறுப்பல்ல; நான் தான்" என்கிறார் சுஜாதா.) இந்தக் கிளைக் கதையை ஒதுக்கி விட்டால் நாடகமும் அதன் மையக் கருத்தும் எடுப்பாகவும் ரசிக்கும்படியாகவும் உள்ளன.

பின்னணி இசையாக காயத்ரி ராமகிருஷ்ணனின் வீணையை மட்டும் ஒலிக்கச் செய்திருப்பது மற்றொரு புதுமை.

யதார்த்தப் போக்கில் அமைந்த நாடக முடிவு என்றாலும் இந்த "அடிமைகள்" வீரர்களையே உருவாக்கும்; எஜமானர்களை அல்ல.

— குட்டி கிருஷ்ணன்



# கடல் ராணி

சாண்டில்யன்

## அத்தியாயம் 17

## குழல் திரை! குமுறிய உணர்ச்சிகள்!

இந்திரஜித் அனந்த் ராணியின் கையொன்றைத் தனது வலது கையால் பிடித்து அவளைப் போகவொட்டாமல் நிறுத்தி, இடது கை ஆள்காட்டி விரலால் அவள் இரத்தின இதழ்களைத் தடவியபோது, ராணியின் விழிகள் நிலத்தை நோக்கித் தாழ்ந்தனவேயொழிய அவள் உணர்ச்சிகள் தாழவில்லை. தென்னஞ்சோலையில் அபாயத்திலிருந்து தன்னை மீட்க அவன் தன்னை மணலில் தள்ளிக் கட்டிப் புரண்ட நேரத்தில் கூட அளவு மீறிக் கொந்தளிக்காத தனது உணர்ச்சிகள், அந்த அறையில், நிலையில், கட்டுத்தறிகளையெல்லாம் மீறி ஆகாயத்தை நோக்கிப் பறப்பதை உணர்ந்தாள் ராணி. இத்தனைக்கும் தென்னஞ் சோலையிலிருந்த நெருக்கம் அனந்துக்கும் தனக்கும் அந்த அறையில் அந்தச் சமயத்தில் இல்லையென்பதையும், இடையின் சேலையைச் சோலையில் துழாவிய அவன் கை தனது கையை சாதாரணமாகவே அப்பொழுது பிடித்துக் கொண்டிருந்ததையும் எண்ணி, 'எட்ட இருக்கும்போது ஏன் இந்த நெகிழ்ச்சி, புரட்சி' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டாள். விடை யேதும் கிடைக்காததால் இதழ்களை மட்டும் மெல்ல அசைத்தாள். அசைந்த இதழ்கள் இந்திரஜித் அனந்தின் முரட்டு விரலைச் சற்று அதிகமாகவே ஸ்பரிசித்து விட்டதால் அவன் அடியோடு நிலைகுலைந்து போனான்.

அவள் செவ்விய கொவ்வை இதழ்கள் தனது விரலில் புரண்டதை உணர்ந்ததால் அவள் நிலையை ஓரளவு புரிந்து கொண்ட இந்திரஜித் அனந்த், தனது மனநிலையும் அப்படி ஒன்றும் அதிக திடமாக இல்லை என்பதை உணர்ந்து கொண்டான். அவள் இடது கையைப் பிடித்திருந்த தனது வலது கையில் ஓரளவு வலு இருந்தாலும் அந்த வலுகூட தன்னைத் திடப்படுத்திக் கொள்ளப் போதாதென்ற எண்ணத்தாலோ என்னவோ தன்னையும் மீறி அந்த வலது கை அவள் இடது கையை அளவுக்கு அதிகமாகவே பற்றி நெரித்ததையும், வலு இழந்த இடது கைகூட தனது ஆள்காட்டி விரலை அவள் இதழ்களில் சற்று அதிகமாகவே பதித்து விட்டதையும் கண்ட இந்திரஜித், எதற்கும் அசையாத தனது அவயவங்களைத் தன்னையும் மீறி அசைய வைக்கும் சக்தி உலகில் உண்டு என்பதைச் சந்தேகமறப் புரிந்து கொண்டான். இப்படி மீறி விட்ட தனது உணர்ச்சிகளுக்கு ஊன்றுகோல் ராணியின் அழகிய உடலாய்த்தான் இருக்க முடியும் என்ற நினைப்பினால் அவள் இடது கைக்கு விடுதலை அளித்துத் தனது வலது கையை அவள் தோள் மீது வைத்து அவளைத் தன்னை நோக்கி இழுத்தான் மெதுவாக.

அதை மறுக்கும் நிலையில் இல்லை ராணியின் மனம். இடது கையை அவன் வலது கை நெரித்தபோது அதனால் ஏற்பட்ட வலி தனக்கு இம்சையை அளிப்பதற்குப் பதில் இன்பத்தை அளித்ததை எண்ணிப் பார்த்து வியந்தாள் ராணி. இம்சையே இன்பமாகும் நிலை பெண்கள் வாழ்வில் உண்டு என்பதை அந்தச் சில நிமிடங்களில் சந்தேகமற உணர்ந்தாள் அவள். அதை மாற்றி இன்பமே இம்சையாகலாம் என்று வைத்துக் கொள்வதும் தவறாகாது என்றும் அவள் நினைத்தாள். அவன் கை தோளைப் பற்றி இழுத்தபோது, கையை விடத் தோளை அவன் வலது கை முரட்டுத்தனமாகப் பற்றி இழுத்தபோதும், அந்த இழுப்புக்கு உட்பட்டுத் தான் அவனை நெருங்கியபோதும் ஏற்பட்ட இன்பம், பூர்த்தி பெறாத காரணத்தால், பூர்த்தி பெற முடியாத காரணத்தால் தன்னை எத்தனை இம்சைப்படுத்துகிறது என்று நினைத்தாள். இப்படி இன்பத்தில் இம்சையையும், இம்சையில் இன்பத்தையும் இணைத்து வைத்திருக்கும் இயற்கையின் விசித்திரத்தையும் எண்ணியதால் மனிதர்களை மீறிய சக்தி ஒன்று அவர்களை இயக்குவதைப் புரிந்து கொண்டாள். இந்த எண்ணம் எழுந்ததால் உள்ளூறச் சிரித்தும்கொண்டாள் ராணி. 'எந்த நிலையில் தத்துவத்தை எண்ணுகிறேன்' என்று தன்னைத் தானே கேட்டுக் கொள்ளவும் செய்தான். சிற்றின்பத்துக்கும் பேரின்பத்




தாங்கும் உள்ள இந்த உறவை யொட்டித்
தான் சிற்றின்பத்தின் அஸ்திவாரத்தில்
பேரின்பத்தைப் பெரியவர்கள் எழுப்பி
னார்கள் என்ற உண்மையை அவள் புரிந்து
கொள்ளவில்லை. உணர்ச்சிகள் அவள் புத்தி
யைத் தடுமாறச் செய்துவிட்ட காரணத்
தால்.

இந்திரஜித் அனந்தின் புத்தியும் அப்படி
யொன்றும் திடமாயிருந்து விடவில்லை.
தோளைப் பற்றி இழுத்ததால் அருகில்
வந்துவிட்ட ராணியின் திண்ணிய இடது
புறப் பரிமாணம் மேஜை மீது போடப்
பட்டிருந்த வலது காலின் இறக்கத்தில்
பதிந்ததாலும், தோளின் கூடவே நகர்ந்து
அவள் அருகில் வந்ததால் மடிந்துவிட்ட
முழங்கையும் அதற்கு மேலும் அவள்
மார்பின் மீது பதிந்ததாலும், ஊடுருவிய
உணர்ச்சிகளைத் திடப்படுத்த அனந்த் அவள்
உதடுகளிலிருந்த விரலை எடுத்து இடது
கையிலிருந்த காகிதச் சுருளை மேஜை மீது
போட்டுவிட்டு அந்த இடது கையால் மேஜை
யைப் பிடித்துக் கொண்டான். அவன் கை
நடுங்கவில்லை. மனம் என்ன காரணத்
தாலோ நடுங்கிக் கொண்டிருந்தது. ஆனால்
அத்தனை நடுக்கத்தையும் மீறி எழுந்த
இச்சை அவன் இடது கையை அவள் மீது
நன்றாக அழுத்திப் புரட்டவே செய்தது.
புரண்ட அந்தக் கையில் பட்டு, உருண்
டெழுந்து கடினப்பட்டுவிட்ட அவள் எழில்
அவனுக்குப் பெரும் சங்கடத்தைவிளைவித்த
தென்றால் ராணியின் நிலை விவரிக்க இய
லாததாயிற்று.

அவன் கை தோளிலிருந்து மார்பு வரை
மடிந்து புரண்டதால் அவள் உடலெங்கும்
உணர்ச்சிகள் பயங்கரமாக ஊடுருவின.
அதைச் சமாளித்துக் கொள்ள அவன் அமர்ந்
திருந்த நாற்காலியில் சாய முயன்றாள்.
அந்த முயற்சி அவள் உடலை அனந்தின்
கால் மீது அழுத்திவிடவே, அவள் காட்
டுத் தீக்குத் தப்பியவள் மடுவில் விழுந்த
கதையாக அதிக ஆழத்தை நோக்கிச்
சென்று கொண்டிருந்தாள். அந்தச் சமயத்
தில் இந்திரஜித்தின் வலது கையைத்
தேடி இடையைச் சுற்றிச் சென்ற இடது
கைக்கு ஆதரவளிக்கத் தோளிலிருந்த
வலது கையும் இறங்கிவிடவே, இரு
கைகளின் வளையத்தில் சிக்கிக் கொண்
டாள் ராணி. அப்படித் தன்னைச் சுற்றி
விட்ட கைகள் திடீரென்று தன்னைக்
குழந்தை போல் தூக்கி விட்டதையும்,
மேஜை மீது அவனுக்கு எதிர்ப்புறமாக
உட்கார வைத்துவிட்டதையும், அந்த
எதிர்ப்புறமும் முழுவதுமாக இல்லாமல்
அரைவாசியா யிருந்தபடியால் தனது
ஒரு கால் மேஜையின் மீது மடிந்தும்
இன்னொரு கால் பக்கவாட்டில் ஊசலாடும்
நிலையில் தொங்கியதையும் பார்த்த ராணி,
பக்கத்திலிருந்த விளக்குச் சுட்டுவிடுமோ
என்ற நினைப்பால் அதைச் சிறிது நகர்த்
தினாள் அப்புறம்.

ராணியை மேஜை மீது தனக்கு எதிரே
உட்கார வைத்துக் கொண்ட அனந்த் நாற்
காலியில் மீண்டும் சாய்ந்து அவளை நோக்கி
னான். விளக்கு மேஜையின் நடுவில் அவனுக்கு
ஒரு புறத்தில் இருந்ததால் அதன் ஒளி அவ
ளது உடலின் ஒரு பாதியில் மட்டும் பட்டு
அதற்கு அதிக மெருகைக் கொடுத்ததென்
றால், இன்னொரு பாதியில் படாமலே
இருட்டடித்த நிலையில் அவள் இருண்ட
பாகத்தை அரையும் குறையுமாகக் காட்டிப்
பிரமிக்கும் ஊகங்களுக்கு இடம் கொடுத்
தது. விளக்கொளி அவள் மீது பட்டு எதிர்ப்
புறம் வீசிவிட்ட நீண்ட நிழல்கூடத்
தரையில் மிக மனோகரமாகக் காட்சி
யளித்தது. அந்த நிழலில் தெரிந்தது ஒரு
புறந்தான். ஆனால் ஆண் மகன் மதியை
மயக்க ஒரு பாதி கூடத் தேவையில்லை என்
பதையும், எழிலின் ஏதாவது ஒரு பகுதியே
போதுமென்பதையும் அனந்த் உணர்ந்து
கொண்டான் நிழலைக் கவனித்தபோது.
நிஜமிருக்க நிழலெதற்கு என்ற சிந்தனையால்
மீண்டும் எதிரே இருந்த அவள் உடல் மீது
கண்களைத் திருப்பினான். இடது காலை மடித்து
அவள் உட்கார்ந்திருந்ததால் உருண்ட கால்
மிக உருண்டையாகி அவள் சேலையைச்
சற்றே நெகிழ்த்தியிருந்தது. தோளை அவன்
விட்டதால் நெகிழ்ந்து விட்ட மேலாடை
அரைவாசி இறங்கி அவள் அழகு முழு
தும் அவன் கண்ணில் படக் கூடாது
என்பதற்காக அவள் மடியை மறைத்துக்
கிடந்தது. கீழே தொங்கிய அவள் கால்
மட்டும் சும்மா யிராமல் லேசாக அசைந்தும்
ஆடியும் மறைத்த அந்த ஆடைப் பகுதியை
அசைத்து அனந்தின் ஊகத்தை உச்ச
நிலைக்குக் கொண்டு சென்றது. அதன் விளை
வாக அவன் சற்று நிமிர்ந்து உட்கார்ந்தான்.
ஒரு முறை பெருமூச்சும் விட்டான்.

அவன் பெருமூச்சுக்குக் காரணம் ராணிக்
கும் தெரிந்திருந்ததால் அவள் பெரும் சங்
கடத்தில் இருந்தாள். அந்தச் சங்கடத்தை
அதிகப்படுத்த அவளை வளைத்த கைகள்
பிரிந்தன. இடது கை அவள் இடது முழங்
காலுக்குச் சற்று மேலே பதிந்தது. உணர்ச்சி
களைக் கட்டி நிறுத்த அந்தக் கையின் விரல்
கள் மாறி மாறி எழுந்து எழுந்து வழுவழுத்த
அவள் காலில் பதிந்தன. ஒரு முறை மடித்து
அழுத்திப் பிடிக்கவும் செய்தன.

ராணி குனிந்த தலை நிமிராமல் உட்
கார்ந்திருந்தாள். இத்தனைக்குப் பிறகும்

அவன் ஏன் ஆலோசிக்கிறான், என்ன ஆலோசிக்கிறான் என்று சிந்தித்துப் பார்த்தாள். அதுவரை பல சண்டைகளில் ஆண் மக்கள் கரங்கள் பட்டபோதெல்லாம் அசட்டையாக, அவர்களைத் தூக்கியடித்த, ஏன்—ஓரிருவரைக் கொன்றும்விட்ட தன் கரங்கள் அனந்தின் ஸ்பரிசத்தினால் இப்படித் திண்டாட வேண்டிய அவசியம் என்ன என்றும் எண்ணிப் பார்த்தாள். வாழ்க்கையில் ஒவ்வொரு பெண்ணும் ஏராளமான ஆண்களைப் பார்த்தாலும், அவள் நாணப்படுவதும், இன்பத்துக்கு ஏங்குவதும் ஒரே ஒரு ஆண்மகனிடந்தான் என்பதைப் புரிந்து கொண்டாள். காதல் என்பது உடலையும் பொறுத்ததல்ல கண் பார்வையையும் பொறுத்ததல்லவென்பதைக் காஸண்ட்ராவில் அந்த அறையில் சந்தேகமற உணர்ந்து கொண்டாள் ராணி. சாதாரணக் கண்களை விட உணர்ச்சியின் கண்களுக்குத் தனிப் பார்வை உண்டு என்பதும் மேஜை மீது உட்கார்ந்திருந்த அந்தச் சமயத்தில் மிகத் தெளிவாகப் புலனாயிற்று அந்த ஏந்திழைக்கு.

ராணியின் மனத்தில் எழுந்த எண்ணங்களோ, சர்ச்சைகளோ, சித்தாந்தங்களோ எதுவுமே எழவில்லை இந்திரஜித் அனந்துக்கு. சிற்பி செதுக்கிய சிலையென மேஜை மீது உட்கார்ந்திருந்த ராணியை ஏதோ வெறி பிடித்தவன் போல் நோக்கிக் கொண்டிருந்தான் அனந்த். அவள் உடற்கூறு பரிமாணங்கள் அவன் கண்களில் வெறியை அதிகப்படுத்திக் கொண்டிருந்தன. அவன் காலின் திண்ணிய மேற்புறத்தில் பதிந்த கை இருந்த இடத்தில் நிற்காமல் தவித்தது. சரேலென்று மேஜை மீதிருந்த தனது கால்களை இழுத்துத் தரையில் விட்டுக் கொண்ட அனந்த் சற்றுக் குனிந்து முகத்தை அவள் மடியில் புதைத்துக் கொண்டான். அதன் விளைவாகத் தன் கண்ணெதிரே கலைந்து கிடந்த அவன் முரட்டுக் குழல்களை இடது கையால் தடவிச் சீர்படுத்த முயன்றாள் ராணி. மகாவீரனான இந்திரஜித் அனந்த் அந்தச் சமயத்தில் ஒரு துஷ்டக் குழந்தை போல் இருந்தான் ராணியின் கண்களுக்கு. இதன் காரணமாகப் பக்கவாட்டில் தொங்கிய அவன் வலது கையை எடுத்துத் தனது இடுப்பைச் சுற்றி வைத்துக் கொண்டாள்.

அப்பொழுது அனந்த் அவள் மடியில் மெல்லத் தனது தலையைப் புரட்டினான் ஏதோ ஆதரவைத் தேடுபவனைப் போல். பிறகு அரைவாசித் தலையைத் திருப்பி மெதுவாக ராணி என்று அழைத்தான்.

ராணி, தலையை நன்றாகக் குனிந்தாள். அரை குறையாக முடிந்திருந்த அவள் குழல்கள் சிதறிக் கிடந்ததால் முடிப்பை முழுதும் பிரித்த ராணி அக்குழலின் பெரும் பகுதியை முன்னுக்குக் கொண்டு வந்து அவன் முகத்துக்கும் தன் முகத்துக்குமாகச் சேர்த்துத் திரையிட்டாள். குழலிட்ட திரைக்குள் சிக்கிய இரு முகங்களும் ஒன்றையொன்று நோக்கின. ராணியின் ஈர உதடுகள் விரிந்து ''ஏன்?'' என்று மிக மெதுவாகக் கேட்டன.

## "சந்தோஷப்படுவது எப்போது?"

(நமது அரசியல் தலைவர்களிடம் மக்கள் கீழ்க்கண்டவாறு பேசினால் தலைவர்கள் சந்தோஷப்படாமலா இருப்பார்கள்?)

### எம். ஜி. ஆர்.



''தமிழ் நாட்டில்தான் இப்போது எந்தப் பிரச்னையும் இல்லையே! எங்கு பார்த்தாலும் மக்கள் 'இதுவன்றோ ராம ராஜ்யம்!' என்று ஆடிப் பாடி, ஆனந்தக் கூத்தல்லவா அடிக்கிறார்கள்... எனவே தாங்கள் சொன்னபடி, சினிமாவில் நடிக்க ஆரம்பிக்கலாமே புரட்சித் தலைவரே!''

### இந்திரா காந்தி

''உங்கள் அருமை எங்களுக்குப் புரிந்து விட்டது. நீங்கள் இனி இந்த நாட்டின் பிரதமராக என்றும் இருக்க வேண்டும்! உங்கள் மகன் சஞ்சய் காந்தி அதன் பின் அவர் மகன், பேரன் என்று உங்கள் வம்சமே இந்தியாவை ஆள வேண்டும்!''



### சரண் சிங்

''உங்கள் காபந்து அரசு எங்களைக் கவர்ந்து விட்டது. தேர்தலே இனி தேவையில்லை. நீங்களே ஆட்சி புரியுங்கள்.''



### ராஜ்நாராயண்

''நீங்கள் என்னென்ன செய்தாலும் புதுமை தான். நீங்கள்தான் உண்மையான புரட்சித் தலைவர். காந்தி சமாதி என்ன கென்னடி சமாதியைக் கூட கங்கை நீர் கொண்டு கழுவுங்கள்.''



### மொரார்ஜி தேசாய்

''நீங்கள் அரசியல் துறவு கொண்டால் எங்களை யார் காப்பாற்றுவார்கள்? உங்கள் ஒருவரால்தான் இந்த நாட்டைக் காக்க முடியும்.''

—ஆர். கண்ணன்



நண்பர் : இந்தக் கதையைப் படித்து விட்டீர்களா?

எழுத்தாளர்: இப்போதுதான் இதற்கு விமர்சனம் எழுதி முடித்தேன். இனிமேல்தான் படித்துப் பார்க்கவேண்டும். —கோ. தீபா

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''ஒரு ரகசியம்'' என்றான் அனந்த் மெதுவாக.

''என்ன?'' ஆவலுடன் எழுந்தது அவள் கேள்வி.

''உன்னை என் மனம்....''

''உம்...''

''தழுவி விட்டது.''

இதைக் கேட்ட ராணியின் இதழ்கள் விரிந்தன புன்முறுவலாய். ''அது...'' என்று துவங்கிய ராணி சட்டென்று பேச்சை நிறுத்தினாள். பாக்கிப் பேச்சைக் கண்கள் பேசின.

புரிந்தது இந்திரஜித்துக்கு. இருப்பினும் மெல்லக் கேட்டான். ''அது....?'' என்று.

''போதுமா?'' என்று சொல் அசைந்தன இதழ்கள். ஆனால் சொல்ல வரவில்லை வெளியே.

இதழ்கள் அசைந்த விதத்திலேயே சொல்லையும் புரிந்து கொண்டான் இந்திரஜித். ஆகையால் மிக மெதுவாகச் சொன்னான் ''ஆத்திரப்பட இது சமயமில்லை'' என்று.

இந்தக் கேள்வி அவள் இதழ்களைச் சிறிது துடிக்க வைத்தன. ''அப்படியானால்'' என்று ஏதோ சொல்ல முயன்றாள்.

''என்ன அப்படியானால்?'' இந்திரஜித்தின் கேள்வியில் அசடு தட்டியது.

''ஆத்திரம் இருக்கிறதா?'' துணிவுடன் கேட்டாள் ராணி.

அனந்த் பதில் சொல்லவில்லை. தலையை மட்டும் அசைத்தான். அவள் தலையை அசைக்கவில்லை. அவள் தலை கிடந்த மடியை லேசாக அசைத்தாள் ஒரு முறை. ''ஒரு பழமொழி இருக்கிறது'' என்று மட்டும் சொன்னாள்.

''என்ன பழமொழி?''

''காற்றுள்ள போதே தூற்றிக்கொள்.''

இதை அவள் சொன்ன முறை, சொன்ன போது குரல் ஒலித்த விதம், விழிகள் வீசிய பார்வை, இதழ்கள் அசைந்த விதம், இவற்றிலிருந்து அவள் உணர்ச்சிக் காற்று பெரிதாக அடிப்பதை அவன் புரிந்து கொண்டான். அந்தக் காற்று அவன் காமாக்கினியை நன்றாக விசிறி விட்டதால் ''ரத்னா!'' என்று அவள் பெயரைச் சொல்லி அழைத்தான் மெதுவாக. பதிலுக்கு எதிர் பார்க்கவில்லை அவன். சற்றுத் தலையைத் தூக்கி அருகே இருந்த இரத்தின இதழ்களை வசப்படுத்திக்கொண்டான். அதற்குப் பிறகு அவள் தலைக் குழல் திரும்பித் திரும்பி அசைந்ததிலிருந்து தான் அவ்வியமா என்பதைச் சிந்தித்ததால் படபடவெனச் சுடரை அடித்து அழிக்கப் பார்த்தது சற்று எட்ட மேஜையின் மீது இருந்த விளக்கு. சிறிது நேரத்தில் அழிந்தும் கொண்டது எண்ணெய் ஆகிவிட்டதால். அந்தகாரம் சூழ்ந்தது அறையில். அந்தகாரத்தை இருவரும் கவனிக்கவில்லை. எண்ணங்களின் எழுச்சியே எண்ணெயாகி, இச்சையே காற்றாகி, உணர்ச்சிகளின் புரட்சியே சுடராகி, அந்தகாரத்தை அர்த்தமற்றதாகச் செய்துவிட்டன. (தொடரும்)

---

## தர்மசங்கடம்




தம்பு!



# ராஜாஜி
## வாழ்க்கை வரலாறு
ராஜ்மோகன் காந்தி



மசோதா குறித்து மாறுபட்ட கருத்துக்கள் கொண்டிருந்த கே. நடராஜன், கோதண்ட ராவ் ஆகிய இருவர் விஷயத்திலும் ஸி. ஆர். பொறுமை இழப்பதைக் காந்தி கண்டு பிடித்து எழுதினார்: "இந்த நண்பர்களுக்குக் கடிதங்கள் எழுதுவது தவிர வேறு எதுவும் செய்ய முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை. நான் அடிக்கடி எழுதுகிறேன். இந்தச் சிகிச்சை முறையையே உங்களுக்கும் சிபாரிசு செய்கிறேன். முதலில் நடராஜனிடம் அதைப் பிரயோகித்துப் பாருங்கள். தமது தர்க்க வாதங்களில் உள்ள குறைபாடுகளை அவர் நிதானமாகத்தான் காண்கிறார். இருப்பினும் தமக்கு நம்பிக்கை பிறக்கச் செய்ய முயலும் எதிர்த் தரப்பு வாதங்களைச் செவி மடுக்கவும் தயாராயிருக்கிறார். ஆகவே அவருடன் வாதாடுவதில் பிரயோஜனமில்லை என்று நான் எப்போதுமே நினைத்தது கிடையாது."

இதற்குள் இந்தியா எதிர் காலத்தில் எப்படி ஆளப்படும் என்பதை அரசு அறிவித்து விட்டிருந்தது. மத்தியிலே ஒரு கூட்டாட்சி இருக்கும். அதில் சுதேச சமஸ்தானங்களும் சேரும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ராஜதானிகளின் பரவலான வோட்டெடுப்பின் மூலம் தேர்ந்தெடுக்கப்படும் சட்டசபைகளுக்குப் பல அதிகாரங்கள் இருக்கும். ஆனால் சில துறைகளில் அவற்றின் முடிவுகள் கவர்னர் அல்லது வைஸ்ராயால் நிராகரிக்கப்படலாம். வாக்காளர் ஜாதி மத அடிப்படையில் பிரிக்கப்படுவார்கள். சிந்துவும் ஒரிஸ்ஸாவும் தனி ராஜதானிகளாகும். பர்மா இந்தியாவிலிருந்து பிரிந்து தனி நாடாகும். அரசின் அறிக்கை ஒன்றில் விவரிக்கப்பட்டிருந்த இந்தத் திட்டம்தான் பின்னால் 1935ம் ஆண்டின் இந்திய அரசியல் சட்டமாக உருவாயிற்று.

இன்னமும் தடைக்கு உள்ளாகியிருந்த காங்கிரஸினால் திட்டத்தை விவாதிக்க முடியவில்லை. 1932ல் டில்லியிலும் 1933ல் கல்கத்தாவிலும் காங்கிரஸ் மகாநாடுகள் நடத்த முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இரண்டு கூட்டங்களும் அரசின் போலீசாரால் கலைக்கப்பட்டன. இருப்பினும் காங்கிரஸ்காரர்கள் தனி நபர்கள் என்றமுறையில் அரசின் அறிக்கைக்குத் தங்கள் எதிர்ப்பையோ ஆதரவையோ தெரிவிக்கலாம். யாருக்குமே அந்த அறிக்கை பிடிக்கவில்லை. ஆனால் சீக்கிரமே இரண்டிலொன்று அவர்கள் தீர்மானித்தாக வேண்டும் என்பது தெளிவாயிற்று: அதாவது முழுமையாகப் புறக்கணிப்பதா அல்லது, எவ்வளவுதான் பிடிக்காமல் இருந்தாலும் ஓரளவு ஒத்துழைப்பேனும் தருவதா என்பதைத் தீர்மானித்தாக வேண்டும்.

பின்னர் குறிப்பிட்ட மார்க்கத்தைத் தேர்ந்தெடுக்கலாம் என்பதற்கு ஆலயப் பிரவேச மசோதாவுக்குச் சட்டசபையில் ஆதரவு தேடப்பட்டதானது முன்னோடியாக விளங்கியது. "சட்ட சபைப் பிரவேசம் பற்றிக் காங்கிரஸின் சிந்தனை மாறி வருகிறதா?" என்று பிப்ரவரி மாதத்தில் கேட்கப்பட்டதற்கு ஸி. ஆர். பதிலளித்தார்:

"சட்டசபைகளைப் புறக்கணிப்பதால் பெரும் தீமையே விளையும் என்பது திருப்திகரமான விதத்தில் நிரூபணமானால் காங்கிரஸ் சட்டசபைகளைப் புறக்கணிக்காது. காங்கிரஸ் எந்த ஒரு கொள்கையையும் தவறு என்று தெரிந்த பிறகும் மூடப் பிடிவாதத்துடன் பற்றிக் கொண்டிருக்கும் என்று யாரும் கற்பனை செய்ய வேண்டாம்."

இந்தக் கட்டத்தில் மகாத்மாவும் ஸி. ஆரும் காங்கிரஸுக்காக அல்லாது தனிப்பட்ட முறையில் தங்கள் சார்பில் பேசிக் கொண்டிருந்தார்கள் என்பதும் காங்கிரஸ் சட்டசபைகளைப் பகிஷ்கரிப்பது என்று பிரமாணம் எடுத்துக் கொண்டிருந்ததும் மெய்யே. இருப்பினும் ஸி. ஆர். சமீப காலம் வரை காங்கிரஸின் தாற்காலிகத் தலைவராகப் பணியாற்றி வந்தவர். ஸ்டேட்ஸ்மன் பத்திரிகை நினைவுக்குக் கொணர்ந்து எழுதியது போல், அவர் மகாத்மாவின் முகாமில் அவருக்கு அடுத்த துணை தளபதியாகப் பல்லாண்டு காலம் இருந்து வந்திருக்கிறார். அவரது சொற்கள் காற்றிலே பறக்க விட்டுவிடக் கூடியவையல்ல. காங்கிரஸ், உண்மையில் சட்டசபை வாசலை நோக்கி மெல்ல அடியெடுத்து வைத்துக் கொண்டுதானிருந்தது.

## 43. கவலையளித்த உபவாசங்கள்

ஆசிரமத்துக்கு அதிக நேரத்தைச் செலவிட ஸி. ஆருக்கு முடியாமல் இருந்தது. 1932ல் அரசின் தாக்குதலை அது எப்படியோ சமாளித்து இன்னமும் இயங்கிக் கொண்டிருந்தது.

அதன் கட்டிடங்களைக்கைப்பற்றிவிட அரசு யோசித்து வந்த போது டாக்டர் பி. சுப்பராயன் அரசுக்குக் கடிதம் எழுதினார். ஆசிரமம் கிராமப்புற மக்களுக்கு நிவாரணம்

✖ சுப்பராயன்

✖ கஸ்தூரிபா

அளித்து வருவதாகவும் அதற்குத் தீங்கு ஏதும் ஏற்படாது என்று தாம் நம்புவதாகவும் தமது கருத்தை வெளியிட்டிருந்தார். மேலும் ஆசிரம ஊழியர்கள் யாரேனும் சட்ட மறுப்பு இயக்கத்தில் ஈடுபடுவதெனில் அவர்கள் முதலில் ஆசிரமத்திலிருந்து ராஜிநாமா செய்துவிட வேண்டும் என்று வி. ஆர். கட்டளை பிறப்பித்திருப்பதை டாக்டர் சுப்பராயன் அரசுக்குத் தெரியப்படுத்தினார். காங்கிரஸ்காரர் அல்லாத சுப்பராயன் செல்வாக்கு மிக்கவராய் விளங்கினார். அவர் வேண்டுகோளைத் தொடர்ந்து அரசு தன் எண்ணத்தைக் கைவிட்டது.

தமது அதிருப்தியைக் காட்ட கவர்னர் ஜார்ஜ் ஸ்டான்லே ஆசிரமம் பெற்றிருந்த சிறிய தபால் நிலையத்தை அங்கிருந்து அகற்றிவிடுமாறு உத்தரவு பிறப்பித்தார். அரசின் அதிகார யந்திரத்தில் மேலதிகாரி, 'ஒரு குட்டு வை' என்றால் கீழே இருப்பவர் ஒன்றை குட்டாக வைத்து எப்படி மகிழ முடியும் என்பது தலைமை தபால் அதிகாரி, கவர்னரின் உதவியாளருக்கு எழுதிய கடிதத்திலிருந்து தெரிய வருகிறது:

''தபால் நிலையங்களின் சூப்பரின்டென்டெண்ட் ஆசிரமத்திலிருந்த தபால் நிலையத்தைப் பக்கத்திலிருக்கும் வேறு ஒரு கிராமத்துக்கு மாற்றி விட்டார் என்றாலும் ஒரு தபால் பெட்டியை மட்டும் ஆசிரமத்திலேயே விட்டுச் சென்றிருக்கிறார் என்பதைக் கண்டேன். நான் இப்போது அந்தத் தபால் பெட்டியையும் நீக்கி விடவேண்டும் என்று உத்தரவு பிறப்பித்திருக்கிறேன். கூடவே ஆசிரமத்தையொட்டியுள்ள மற்றொரு தபால் நிலையத்தையும் மூடிவிட உத்தரவிட்டிருக்கிறேன். இதன் விளைவாக ஆசிரமவாசிகளும் அவர்களைச் சுற்றியுள்ள அனுதாபிகளும் நீண்ட தூரம் நடந்து தேகப் பயிற்சி பெறலாம். இதனால் அவர்கள் மனம் திருந்தாவிட்டாலும் உடலாவது திருந்தும்!''

கைதான ஆசிரம அங்கத்தினர்கள் 1932 இறுதியில் விடுவிக்கப்பட்டதிலிருந்து ஆசிரமத்தின் நடவடிக்கைகள் புனர் ஜென்மம் பெற்றன. 'தீண்டாதார்' குடியிருப்புக்களில் சிறுவர் சிறுமியருக்கு மேலும் பல பள்ளிகளும் முதியோருக்கு இரவு வகுப்புக்களும் ஆரம்பிக்கப்பட்டன. சில இடங்களில் ஜாதி இந்து குழந்தைகளும் ஹரிஜனக் குழந்தைகளும் சேர்ந்து படித்தனர்.

ஒருவன் : ''விக்கல் வருதுடா!''
மற்றவன் : ''வந்தால் வரவேற்று உட்காரச் சொல்லேன்''
ஒருவன் : ஆமாம்! நிக்கவே மாட்டேங்கிறது! அப்புறம் எப்படி உட்காரச் சொல்வது!''
—ஆர். முரளிகுமார்




குருவாயூர் பணியில் உதவுவதற்காகத் தெற்கே வருமாறு வி. ஆரால் அழைக்கப்பட்டிருந்த கஸ்தூரிபா, டிசம்பரில் ஆசிரமத்துக்கு விஜயம் செய்தார். கதருக்குச் சாயம் ஏற்றப்படுவதைக் கண்டார். ''சாயம் போகுமா?'' என்று வினவ எண்ணித் தமது அரைகுறை ஆங்கிலத்தில், ''Colour Go?'' என்று கேட்டார். வி. ஆர். இதற்குப் பதில் கூறும் முகமாக, ''This is no–go colour'' என்றார். சுற்றிலுமிருந்தவர்கள் சிரித்தார்கள். கஸ்தூரிபா தமது ஆங்கிலம் தவறானதா என வினவ, ''தவறில்லை'' என்றார் வி. ஆர். ''(மற்றவர்கள் பேசுவது மன்னரின் ஆங்கிலம் எனில்) இது பாவின் ஆங்கிலம்.'' வி. ஆரைப் பொருத்தமட்டில் பா மன்னருக்கு இணையான அந்தஸ்து உடையவர் தான்.

புத்தாண்டில் ஆசிரமத்தினருக்கும் ஒரு கிறிஸ்துவ மதப்பிரசாரகருக்கும் இடையில் ஒரு வாக்குவாதம் எழுந்தது. ஆசிரமத்துக்கு அருகேயுள்ள சித்தலாந்தூர் என்ற கிராமத்தில் 'தீண்டாதாரான' பல ஆதிதிராவிடர்கள் கிறிஸ்துவர்களாக மத மாற்றம் செய்யப்பட்டிருந்தனர். மதம் மாறாமல் இன்னும் இந்துக்களாகவே இருந்தவர்கள் ஆசிரமத்தினரை அணுகித் தங்கள் பகுதியில் உள்ள கோயிலைப் புதுப்பிக்குமாறு வேண்டினர். ஆசிரமம் இதற்கு ஒப்புக் கொண்டது.

சேலத்திலிருந்த மரியாதைக்குரிய ஜே. வி. விட்னே பாதிரியார் இந்த உதவியை ஆசிரமம் வாபஸ் பெறவேண்டும் என்று வி. ஆரை வற்புறுத்தினார். புதிதாக மதம் மாறியவர்களுக்கு ஏற்பட்டுள்ள நம்பிக்கையை ஆசிரமவாசிகள் செய்கின்ற உதவி குலைத்து விடும் என்று காரணம் காட்டினார். வி. ஆர். தமது பதிலில் ஜாதி இந்துக்கள் ஹரிஜனங்களிடம் கண்ணியமற்ற முறையில் நடந்து கொண்டிருப்பதை ஒப்புக் கொண்டார். ஆனால் இது காரணமாகத் 'தீண்டாதாரி'டையே ஆன்மீகப் பணியாற்றும் ஏகபோக உரிமையைக் கிறிஸ்துவ மதப்பிரசாரகர்கள் பெற்று விட்டதாகாது என எடுத்துக் காட்டினார்.

ஒரு மதத்தின் மீது மற்றொரு மதம் தன் செல்வாக்கைச் செலுத்திக் கோட்பாடுகளில் ஆரோக்கியமான மாற்றங்களை விளைவிப்பதைத் தாம் வரவேற்றாலும் ஒரு நல்ல மதத்திலிருந்து மக்களை மாற்றி மற்றொரு மதத்தைத் தழுவச் செய்வதைத் தாம் விரும்பவில்லை என்று அவர் தெளிவாக்கினார்.

ஏப்ரல் இறுதியில் மகாத்மா தமது எரவாடா சகாக்களிடம், மே எட்டாம் தேதியன்று தாம் இருபத்தோரு நாள் உண்ணாவிரதம் தொடங்கப் போவதாகத் தெரிவித்தார். இவ்விதம் தம்மைத் தாமே புனிதப்படுத்திக் கொள்வது, ஹரிஜன இயக்கம் சக்தி வாய்ந்த விதத்தில் நடப்பதற்கு அவசியமானது என்று தாம் உணர்வதாகச் சொன்னார்.

(தொடரும்)

**தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்**

# புதிய தலைமுறைக்கு வழி விடுங்கள்!



பாலசந்தர், காயத்ரீநாராயணன்

இளம் தலைமுறையை ஊக்குவிக்க வேண்டும் என்று பிரபல வித்வான்கள் அடிக்கடி கூறுவார்கள். ஆனால் இளம் தலைமுறையை முன்னணிக்குக் கொண்டுவர அவர்கள் என்ன செய்தார்கள் என்று பார்த்தால் உருப்படியாக ஒன்றுமிராது.

இதற்கு விதிவிலக்காக இதோ வீணை எஸ். பாலசந்தர் தமது சிஷ்யை குமாரி காயத்ரி நாராயணனை இரண்டு முழுநீள இசைத் தட்டுகளின் மூலம் அறிமுகப்படுத்துகிறார். தாமும் அவளுடன் சேர்ந்து வாசித்து ஊக்குவித்திருக்கிறார். தமக்குச் சமதையான அந்தஸ்தை காயத்ரிக்குத் தந்து வாசிக்கச் சொல்லியிருக்கிறார். பல இடங்களில் தம்மைப் பின்னணிக்குத் தள்ளிக் கொண்டு காயத்ரிக்கு முக்கியத்வம் தந்துள்ளார்.

பத்து வயதான காயத்ரியை வீணை பாலசந்தரிடம் அழைத்து வந்தவர் செம்பை. "இத்தனை சின்ன வயசுக் குழந்தையை நான் எப்படி சிஷ்யையாக ஏற்பேன்?" என்று தயங்கினார் பாலசந்தர். "காயத்ரி விஷயத்தில் 'நீங்கள் முடியாது' என்று சொல்லக் கூடாது" என்று ஒரே போடாகப் போட்டார் செம்பை.

மறுக்க முடியாமல் காயத்ரி நாராயணனை சிஷ்யையாக ஏற்ற பாலசந்தர் இப்போது சிஷ்யை பற்றி நியாயமான பெருமை அடைந்திருப்பதுடன் நல்ல சிஷ்யையை அளித்த செம்பையையும் வாழ்த்திக் கொண்டிருக்கிறார். "எதிர்காலம் காயத்ரி போன்ற இளம் வித்வான்களுக்கே சொந்தம்" என்று கூறும் பாலசந்தர் இந்த இரு எல். பி. இசைத்தட்டுக்களிலும் ராகங்கள், பாடல்கள் பக்கவாத்தியங்கள் ஆகியவற்றைத் தேர்ந்தெடுப்பதில் விசேஷ கவனம் செலுத்தியுள்ளார். முதல் எல். பி.யில் சாவேரி வர்ணத்தில் ஆரம்பித்து, சாரங்கா, உசேனி பேகட என்று பிரபலமான ரக்தி ராகப் பாட்டுகளைத் தந்துள்ளார். சிவராமனும் விநாயகராமும் மிக அனுசரணையாக வாசித்து இசைத்தட்டின் மதிப்பை உயர்த்துகிறார்கள்.

இரண்டாவது எல். பி.யில் நீதிமதி ராகத்தில் ஆரம்பித்துப் பிறகு மிகவும் பிரபலமான வஸந்தா, பேஹாக் ஆகியவற்றையும் கடைசியில் உச்ச கட்டமாக காபியில் தியாகையர் கிருதி ஒன்றையும் கொடுக்கிறார். காரைக்குடி மணியும், கஞ்சிரா ஹரிசங்கரும் இந்த இரண்டாவது எல். பி.யில் பக்க வாத்தியம் வாசிக்கும் பணியை 'பக்கா'வாகச் செய்திருக்கிறார்கள்.

வீணை இசையில் மட்டுமல்ல, இசைத்தட்டின் மேலட்டை டிசைனிலும் கூட பாலசந்தரின் தனித்தன்மை பளிச்சிடுகிறது!

காயத்ரி நாராயணன் தம்மிடம் பயின்றாலும் பெண்மைக்குரிய இயல்பான இனிமையையும் மிருதுத் தன்மையையும் தன் வாசிப்பில் இணைத்துக் கொண்டிருப்பதை பாலசந்தரே பாராட்டுகிறார். நாமும் எல். பியைக் கேட்கும்போது அது உண்மை என உணர்ந்து வாழ்த்துகிறோம்.

—குட்டி கிருஷ்ணன்



# திருமலை-திருப்பதி தேவஸ்தானம் திருப்பதி

**திருமலை - திருப்பதி தேவஸ்தானம் புராதன பாரத கலாசாரம் பண்பாடு ஆகியவற்றைப் பாதுகாக்கவும் கல்வியைப் பரப்பவும் மக்களின் துயர் துடைக்கவும் தங்களை அர்ப்பணித்துக் கொண்டுள்ளன**

கலியுகத்தில் தம் பக்தர்களைக் கடைத்தேற்றுவதற்காக வைகுண்ட நாதனை ஸ்ரீஹரியே திருமலையில் வந்து தங்கி இருப்பதாக வராஹ புராணத்தில் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

இன்று ஒவ்வொரு நாளும் லக்ஷக்கணக்கான பக்தர்கள் திருமலைக்கு வருகிறார்கள். அவர்கள் தங்கள் கஷ்டங்களை ஏழுமலையானிடம் சொல்லிக் கண்ணீர் மல்க அவன் உதவியை வேண்டுகிறார்கள்.

தாங்கள் எண்ணியது நடக்கும்போது, துன்பங்கள் துடைக்கப் படும்போது, ஆண்டவனுக்குத் தங்கள் காணிக்கையாகப் பொரு ளாகவும், பண்டங்களாகவும் அளிக்கிறார்கள். இப்படிப் பக்தர்கள் செலுத்தும் காணிக்கை ஏராளமாக வருகிறது. உலகில் வேறு எந்தக் கோவிலுக்கும் பக்தர்களிடமிருந்து இவ்வளவு பெரிய தொகை காணிக்கையாக வருவதில்லை. திருப்பதி கோயிலின் நிர்வாகத்தை கவனிக்கும் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் காணிக்கையாக வரும் இப்பெரும் தொகையை புராதனமான இந்து மதத்தின் கலாச்சாரம், பண்பாடு, ஆகியவற்றை விளக்கவும், கல்வியைப் பரப்பவும், மக்களின் துயர் துடைக்கவும் செல விடுகிறார்கள்.

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் 5,000 பேர்களுக்கு நேரிடை யாக உத்தியோகம் அளிக்கிறார்கள். மற்றும் ஏராளமான குடும் பங்கள் வாழ்வதற்கு வாய்ப்பளிக்கிறார்கள்.

திருமலைக்கு விஜயம் செய்யும் பக்தர்களின் நல்லெண்ணத்தினாலும் ஆண்டவனின் அருளினாலுமே இந்த மகத்தான மாபெரும் பணியை எங்களால் செவ்வனே நிறைவேற்ற முடிகிறது என்பதை அடக்கத் துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

எக்ஸிக்யூடிவ் ஆபீசர்

திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி

● அவசரச் சட்டம் காரணமாகப் பரிசுகளைத்தான் அனுப்ப முடியாதே தவிர பரிசு பெற்றவர்களில் மூவர் பெயரை, வெளியிட்டது போல் முழுவதும் சரியாக எழுதிய ஏழு பெயர்களையாவது வெளியிடலாமில்லையா? எந்தக் கண்ணுக்கு எந்தக் கவிதை என்றாவது வெளியிட்டிருக்கலாமே?

சிவகாசி உமாராணி

ரயில் ராதிகா மூன்று வது பரிசுக்குரியவரைத் தேர்ந்தெடுக்க முதலில் விடைத் தாள்களைக் கலைத்துப் போடுகிறார்.




சரியான விடை:

| | |
|---|---|
| கம்பன் | —ஸ்ரீவித்யா |
| பாரதிதாசன் | —ரத்தி |
| திருவள்ளுவர் | —தீபா |
| ச.து.சு.யோகி | —சுஜாதா |
| கண்ணதாசன் | —ஸ்ரீப்ரியா |
| கயமனார் | —ஸ்ரீதேவி |

● உங்கள் கைகளைக் குலுக்கி முத்தமிட்டுப் பாராட்ட வேண்டும் என்ற ஆசையை ஏற்படுத்தியது உங்கள் (11—11—79) ''நயினார் தாஸ் அவர்களே'' என்ற தலையங்கம்.

சென்னை-94. பாலு

● தேசாயின் ஆதரவாளன் என்ற போதிலும் தேசாய் பற்றிய 'எக்ஸ்ரே' படப்பிடிப்பு வெகு ஜோர் எனப் பாராட்டுகிறேன். நேர்மையான அரசியல்வாதிகளில் தேசாயும் ஒருவர் என்று எழுதியது குறித்து மிக்க மகிழ்ச்சி.

சென்னை-5 எஸ். சங்கர சுப்பிரமணியன்

● மொரார்ஜி தேசாய் போன்ற நேர்மையான நல்ல மனிதரைக் கேலிப் பொருளாக்கி, அரசியலில் நல்லவர்கள் இல்லாதபடி பார்த்துக்கொள்ளும் கைங்கரியத்தை கல்கி 'எக்ஸ்ரே' மூலம் செய்து கொண்டிருப்பதால் யாருக்கு ஆதாயம்? நேர்மையற்றவர்களுக்குத்தானே?

எக்ஸ்ரேயில் திரு மொரார்ஜி மிக மங்கலாகவும், ரங்கநாயகி பளிச்சென்றும் தெரிகிறார்.

நெல்லை செ. அரங்கநாதன்

● மொரார்ஜி தேசாய் வாழ்க்கைக் குறிப்பில் ஒரு சிறு திருத்தம். அவர் ஐ.சி.எஸ். வர்க்கத்தைச் சேர்ந்தவர் அல்ல. பம்பாய் சிவில் ஸர்வீஸில் சேர்ந்து, மொரார்ஜி ஆர்.டி.ஓ., டிப்டி கலெக்டர் பதவிகள் வகித்தார்.

சென்னை—34 எஸ். நாகேஸ்வரன்

● மீ. பா. சோமுவின் 'நீங்காத நினைவுகள்' அருமை. ஆரம்பமே மெய்சிலிர்க்க வைக்கிறது. (ஐஸ் அல்ல) இதுபோன்ற நல்லாரின் அறிவுபூர்வமான அனுபவங்கள் இத்தலைமுறையினைச் சார்ந்தோருக்குப் பெரிதும் பயன்படும்.

குடியாத்தம் நா. செந்தில் மீரா

● கார்ட்டூன் பகுதியில் 'சாவி'யைக் கிண்டல் செய்துவிட்டு 'கடுகு பதில்கள்' பகுதியில் அவரைப் பாராட்டியுள்ள 'கல்கி'யே உன் இரட்டை வேடத்தை என்னவென்று வர்ணிப்பேன்?

அரகண்டநல்லூர் கே. பிரதாப் சிங்

● ஊருக்கு இளிச்சவாயன் ஆண்டி போல் உங்களுக்கு எங்கள் கருணாநிதி இளிச்சவாயனாகப் போய்விட்டார். எதற்கு எடுத்தாலும் கலைஞரைத் திட்டுவதே உங்களுக்குப் பொழுதுபோக்காய்ப் போய்விட்டது. தயவுசெய்து உங்கள் பாதையை மாற்றிக்கொள்க.

வேலூர் (சேலம்) இமயவரம்பன்

● உமாபதியின் ''சாவி ஜோசியம்'' கார்ட்டூன் மிக, மிக, மிக, மிக.....அருமை!

'வைரங்கள்' தொடரை விரைவில் முடித்துவிட்டாரே என்ற கோபத்தில் இருக்கும் எங்களுக்கு 'சுஜாதா விரைவில் ஒரு நீண்ட தொடர்கதை எழுதுவார் என்று எதிர்பார்க்கலாம்' என்ற அறிவிப்பு குளிர்ச்சியாக இருக்கிறது.

திருச்செந்தூர் ஆ. சீனிவாசன்

● குடும்பத்தினர் அனைவருமே ரசித்துப் பாராட்டிய அம்சம்—'வராத நோயாளிகள்'

'ரயிலை வென்ற குதிரையின்' வேகமும் தியாகமும் பாராட்டுக்குரியதானாலும், குதிரையில் மகாராஜா மட்டுமே சவாரி செய்வார்! ரயிலில் பற்பல ஜனங்கள் பயணம் செய்யலாமே?

குண்டூர் எஸ். ஆர். சீதாலக்ஷ்மி

● பிஞ்சு நெஞ்சம், கொஞ்சும் புறா, அன்பு நெஞ்சம்.... வித்தியாசமான இவ்வார அட்டைப் படம் (கவிதையும்தான்) என் நெஞ்சில் இன்பத் தேனைத் தேக்கியது.

சென்னை-4 மயிலை கோபி

● இந்த வார ஸ்ரீதேவியின் படத்தைப் பற்றிப் புகழ்ந்து வர்ணிக்க வார்த்தையே எனக்குக் கிடைக்கவில்லை. தயவுசெய்து எனது அபிமான நடிகை சத்யப் பிரியாவின் புகைப்படத்தையும் இப்படித் தாருங்களேன்.

மதுரை-1 கலைக்கண்ணன்

# பூக்குழி

லக்ஷ்மி

## 14

அகல்யாவுக்குப் பிறந்த வீடு வெகுதொலைவில் இருக்கவில்லை. பக்கத்து டவுனில் அதே வீட்டில்தான் தபால்காரர் குருநாதன் வேலையினின்று ஓய்வு பெற்ற பின்னரும் தொடர்ந்து வசித்து வந்தார். தாய் வீடு அருகில் இருக்கிறது என்பதற்காக அகல்யா அடிக்கடி பிறந்தகத்துக்குப் போகும் பழக்கத்தை வைத்துக்கொள்ளவில்லை. மாமியார் உத்தரவு கொடுத்தால் மட்டும் விசேஷ தினங்களின் போது தங்கள் வீட்டு வண்டியில் சிங்காரத்தின் துணையோடு போய்த் தாய் தந்தையரைப் பார்த்துவிட்டு விரைவில் திரும்பிவிடுவது வழக்கம். மாமியார் எடுத்துப் போ என்று சொன்னால் ஒழிய தோட்டத்தில் காய்த்திருக்கும் காய்களைக் கூட அவள் கொஞ்சம் தன் வீட்டுக்கு எடுத்துப் போவதில்லை. குருநாதனும் அவசியம் இருந்தால் ஒழிய சம்பந்தி வீட்டுக்கு அடிக்கடி வர விரும்பியதில்லை. பஞ்சரத்தினத்தின் உடல் நிலையைப் பற்றி விசாரிக்க மனைவியோடு ஒருசில நிமிஷங்கள் வந்துவிட்டு உடனடியாகக் கிளம்பிவிடுவது வழக்கம். இருந்து சாப்பிட்டு விட்டுப் போகலாமே ஏன் அவசரம்?... பஞ்சரத்தினம் ஒவ்வொரு முறையும் வாய் நிறைய உபசரிப்பது வழக்கம்.

ஆனால் குருநாதன் சாப்பிட உட்கார்ந்து விடமாட்டார். கொண்டான் கொடுத்தான் வீட்டில் கை நனைப்பது தமது கௌரவத்துக்குப் பங்கமென்ற நினைப்பு.

மகள் வீட்டுக்கு வரும்போது குருநாதன் வெறுங்கையுடன் வருவதில்லை. ஒரு சீப்பு வாழைப் பழமோ அல்லது தமது தோட்டத்தில் காய்த்த ஒரு கத்தை முருங்கைக் காய்களையோ எடுத்து வராமல் இருந்ததில்லை.

நேரே தாம் கொண்டு வந்ததை மகள் கையில் கொடுத்துவிட மாட்டார். சம்பந்தி அம்மாளைக் கண்டு வணக்கம் தெரிவித்துவிட்டு உடல் நலனை விசாரித்த பின்னர் துணிப் பையிலிருந்து பழத்தை எடுத்துப் பஞ்சரத்தினத்தின் முன்னால் பணிவுடன் வைப்பார். அப்படியெல்லாம் பந்தங்களை அனுசரிக்கும் கண்டிப்பான மனிதர் குருநாதன்.

விடிந்ததுமே அன்று பளிச்சென்று வெப்பமுடன் சூரியன் வீசிக் கொண்டிருந்தது. குருநாதன் தலை மீது துண்டை மடித்துப் போட்டுக் கொண்டு கால் செருப்பு இருக்கென்று சப்திக்கத் துணிப் பையைக் கையில் பிடித்தபடி தெருவுக்குள் வேகமாகத் தனியாக வந்து கொண்டிருந்தார். சிங்காரத்தின் துணையுடன் முத்துமாரி கோவிலுக்குப் போயிருந்த அகல்யாவும் எதிர்ப்புறமாக வந்து தெருவுக்குள் நுழைந்தாள்.







''அப்பா! நீங்களா?'' மகள் ஆச்சரியத்துடன் நிமிர்ந்தாள்.

தலைமீதிருந்த துண்டை எடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டு ஒரு வீடு எழுப்பிய நிழலின் அருகே வந்து நின்றார்.

''உன் மாமியார் உடம்புக்கு—ரொம்ப முடியாமப் படுத்திருக்காங்கன்னு காதில் பட்டது. ஒரு வார்த்தை சிங்காரத்துக்கிட்ட சொல்லி அனுப்பக் கூடாதாம்மா?'' அங்கலாய்த்துக் கொண்ட குருநாதன் மகளை வியப்புடன் உற்றுப் பார்த்தார். இடையில் மாந்தளிர் மேக வர்ணப் பட்டுச் சேலை. கழுத்திலே கல் அட்டிகை. காதுகளில் வைரக் கம்மல். தலை நிறைந்த மல்லிகைப் பூ.... முகத்தில் இதுவரை அவர் காணாத மகிழ்ச்சியும் பூரிப்புமாக அவள் மிக அலங்காரமாகக் காணப்பட்டாள்.

''மாரடைப்பு வந்ததிலிருந்து அவங்க உடம்பு அத்தனை சுகமாக இல்லை. ஒரு நாளைக்கு ரொம்பப் பலவீனமாக இருக்காங்க — ஒரு நாளைக்கு ரொம்பத் தெம்பாகக் காணப்படறாங்க.... அவுங்க உடம்புக்குப் பாதிக் காரணம் மகளைப் பிரிஞ்சிருக்கிற துயரம். மற்ற பாதிக் காரணம் நோய்கள். ஒண்ணு ரெண்டா.... உடம்பிலே பல கோளாறுகள். பதினைஞ்சு நாளைக்கு முந்தி ஆச்சு போச்சுன்னு ஆயிடுச்சு... பயந்துட்டேன். அவருக்குக் கடுதாசி எழுதிப் போட்டேன். தந்தி அடிச்சா அவர் கலங்கிடுவாரேன்னு அச்சம். இரண்டே நாளில் எழுந்து உட்கார்ந்துட்டாங்க....''

''இப்போ எப்படியம்மா இருக்காங்க?''

''காலையிலே எழுந்து குளிச்சுட்டுச் சாப்பிட்டுட்டு நாற்காலியிலே உட்கார்ந்திருக்காங்க. பார்த்தா நீங்க ஆச்சரியப்படுவீங்க. அத்தனை ஒரு தெம்பு வந்திருக்கு... ஏன் தெரியுமா? அவர் வரப் போகிறார். இந்த வாரக் கடைசிக்குள்ளே வந்துடப் போவதாகக் கடிதாசி வந்திருக்கு. அதைக் கேட்டதும் படுக்கையிலிருந்து துள்ளி எழுந்து உட்கார்ந்துட்டாங்க. மகன் மேலே அத்தனை ஆசை அவங்களுக்கு. சலங்கை கிணு கிணுத்ததுபோன்று மெல்லச்சிரித்தாள் அகல்யா. மகிழ்ச்சியில் சிவந்துபோன அவள் முகத்தையும் பெருமிதத்தில் பளபளத்த கண்களையும் பார்த்த தந்தை மனம் நிறைந்து போனார்.

''முத்துமாரி மனம் இறங்கிட்டாள்: யுகம் போல் தோணுச்சு.... இந்தப் பிள்ளையாண்டான் எப்ப வரப்போறாருன்னு என் மனசும் தவிச்சுது. நல்லபடியா ஊர் வந்து சேரட்டும். அது போதும்மா.... உன் அத்தை உடம்பும் குணமாயிடும்.''

''இப்பவே பாதி குணமாயிடுச்சு அப்பா!'' முறுவலித்தாள் மகள்.

''அதானே பார்த்தேன். வீட்டிலே மாமியார் உடம்புக்கு முடியாமப் படுத்திருக்கிற வேளையிலே கல்யாண வீட்டுக்குப் போறாப் போலே தடபுடலா உடுத்திண்டு இந்தப் பொண்ணு கோயிலுக்குப் போயிருக்கே அப்படின்னு நினைச்சேன்.... இப்பப் புரிகிறது..'' பரிகாசமாகப் பேசிவிட்டு வெட்கத்திலே சிவந்து போன மகளின் முகத்தைப் பரிவுடன் பார்த்தார்.

அப்பா! அவருக்குத்தான் எத்தனை பாசம், நிம்மதி?

''திருச்சியிலிருந்து பஸ்ஸில் வராரா அம்மா?'' மகள் நீட்டிய பிரசாதத் தட்டிலிருந்து குங்குமத்தைத் தொட்டு நெற்றியில் வைத்துக் கொண்டார்.

''ஊருக்குக் கிட்ட வந்த பிறகு உங்க மருமகனுக்கு அத்தனை பொறுமை இருக்குமா? ஒரு டாக்ஸியைப் புடிச்சுக்கிட்டுப் பறந்து வந்துடுவார்னு நினைக்கிறேன். முத்துமாரிக்கு அபிஷேகம் செய்துட்டு வந்தேன், அப்பா... அத்தோட நானும் காப்புக் கட்டிக் கொண்டிருக்கிறேன். சீக்கிரம் கோவிலில் கொடியேற்றம் நடக்கப் போகிறது. அப்புறம் தீமிதி இருக்கு. கோயில் பூசாரி ஒரு மண்டலமா விரதமா இருக்கிறார். பெண்கள் பதினைஞ்சு நாளைக்கு விரதமா இருந்தாப் போதும்னு சொல்லிட்டு அபிஷேகம் செய்து ஆத்தாள் பாதத்திலே வச்ச கங்கணத்தைக் கொடுத்தார். அங்கேயே கையில் கட்டிக்கிட்டேன். அவருக்கும் ஒண்ணு ஆத்தா பாதத்திலே வச்சு எடுத்துக் கொண்டு வந்திருக்கேன்.''

''என்னப்பா இது... நான் ரொட்டிக்கடை நடத்தினு ரெட்டியார் என்கிற என் பெயரும் ரொட்டியார்னு ஆயிடுமா?''




குருநாதனுக்குத் திடீரென்று கவலை ஏற்பட்டது. மகளின் அழகு முகத்தை மறுபடியும் பரிவோடு பார்த்தார்.

''ஏம்மா? இப்படிக் கடுமையாகவா ஆத்தா கிட்ட வேண்டிக்கணும்? பழக்கமில்லாத விஷயமாச்சே?''

''அவர் சின்ன வயசிலே பூசாரி கையைப் புடிச்சுட்டுப் பூக்குழியிலே பல தடவைகள் இறங்கியிருக்காராம் அப்பா. அத்தை கூட பல தடவை இறங்கி யிருக்காங்க. அவங்க வீட்டுப் பெண் என்னையும் ஆத்தா அன்போட தன் பூப்பாவாடையில் ஏந்திப்பாள். எனக்கு மனசிலே ஒரு பெரிய நம்பிக்கை. அதனாலே எனக்கு மனசிலே குழப்பமே இல்லை. நீங்களே பாருங்க... பூப்பாவாடையிலே நடக்கிறாப்பல பால் குடத்தோட பரபரன்னு நான் நடந்து வரதைக் கண்டு நீங்க பிரமிக்கப் போறீங்க...''

''அந்த ஆத்தா உனக்குத் துணையிருப்பாம்மா. மனசிலே அத்தனை பக்தியும் நம்பிக்கையும் இருந்தாப் போதும்....''

அப்பாவும் மகளும் பேசிக் கொண்டே மெல்ல நடந்தனர்.

தந்தைக்கு முன் விரைவாக வீட்டுக்குள் புகுந்து குளியலறைக்குச் சென்று கால்களைக் கழுவிக் கொண்டு அவசரமாக வந்தாள் அகல்யா. பஞ்சரத்தினம் ஹாலில் நாற்காலியில் சாய்ந்தபடி உட்கார்ந்திருந்தாள். பூரணி சமையலறையில் வேலையாக இருந்தாள்.

''அத்தை! அப்பா வந்திருக்கிறார் 'உங்களைப் பார்க்க.'' கூறியபடி தான் கொண்டு வந்த பிரசாதத் தட்டை மாமியார் கையருகே வைத்தாள்.

தட்டைத் தொட்டுக் கண்களில் ஒத்திக் கொண்டாள் பஞ்சரத்தினம்.

''உட்காருங்க. வீட்டிலே எல்லோரும் சௌக்கியமா?'' உற்சாகத்துடன் விசாரித்துக் கொண்டு மெல்லத் திரும்பினாள்.

அகல்யா இழுத்துப் போட்ட நாற்காலியில் குருநாதன் உட்காருமுன் கையோடு கொண்டு வந்த பழத்தைப் பையிலிருந்து முக்காலியின் மீது பஞ்சரத்தினம் அருகே வைத்தார். 'அகல்யா உன் மாமியாருக்கு அதை எடுத்துக் கொடும்மா' என்றார் ஜாடையாக.

''என்னப்பா அத்தைக்குத் தேன் கதலிப் பழம் கொண்டுவந்திருக்கீங்களே... அவங்க உடம்புக்கு இதெல்லாம் ஒத்துக்காதே!'' அகல்யா கூறி முடிக்கு முன் பஞ்சரத்தினம் குழந்தையாகச் சிரித்தாள்.

''பாருங்க அய்யா... உங்க மகள் என் வாயைக் கட்டி வயிற்றைக் கட்டி என்னை வத்தக் காயப் போடறாள்.... அவளை என்ன செய்யலாம் நீங்களே சொல்லுங்க..'' வேடிக்கையாக மறுபடியும் உரக்கச் சிரித்தாள்.

மெலிந்து ஒடுங்கி வாடிப் போயிருந்த அவள் முகத்திலும் மகிழ்ச்சி தாண்டவமாடிக் கொண்டிருப்பதைக் குருநாதன் கவனிக்கத் தவறவில்லை.

''அகல்யா பொல்லாதவள்தான் ஒப்புக் கொள்கிறேன். இப்ப அவள் உங்க வீட்டுப் பெண்ணாகி விட்டதால் தண்டனையை நீங்கதான் நிர்ணயிக்க வேண்டும்.... உங்க மகன் வந்ததும் அவரிடம் இவளை ஒப்புவிச்சுடுங்க.''!

# கோ-ஆப்டெக்ஸ்
# அழகோவியம்!

அழகு மகளிர் ஆவலோடு வாங்கி
அணிவதெல்லாம் கோ-ஆப்டெக்ஸ்
சேலைகளையே !

அதில் உள்ள விந்தையெல்லாம்
அழகும் நயமும் இழைய...
அகம் கவரும் வண்ணங்கள் மிளிர...
கோடுகளும்-புள்ளிகளும் குலவ...
எண்ணற்ற வகைகளை
கோ-ஆப்டெக்ஸ் வழங்குகிறது !





கோ-ஆப்டெக்ஸ்

கைத்தறி

சம்பந்தி குருநாதனும் மகிழ்ச்சியுடன் சிரித்தார். இத்தனை நாளும் உள்ளத்தை அழுத்திக் கொண்டிருந்த கவலை மறைந்து மனம் லேசாகிவிட்ட நிலையில் அவருக்குக் கட்டுக் கொள்ள முடியாத ஆனந்தம்.

கணவனைப் பிரிந்து துயரத்திலே துவண்டு கொண்டிருந்த மகளுக்கு விடிவு காலம் வந்து விட்டது. இனி அவர்கள் ஒருபோதும் பிரியாது பல்லாண்டு காலம் இனிதே வாழ வேண்டும் என்று அவர் மனம் ஓயாது வாழ்த்திக் கொண்டிருந்தது.

''இவளுக்குத் தண்டனை கொடுக்கிற பொறுப்பை என் பேரன் கிட்டே விட்டுட்டுப் போறேன். நீங்க பார்க்கப் போறீங்க... வர வருஷத்திலே இந்த வீட்டுலே ஒரு வாண்டுப் பய வந்து இவளை நிக்கவொட்டாமல் வேலை வாங்கப் போறான்.... அதுக்குள்ளே கண் ஆபரேஷன் ஆகி ஆத்தா இருபையாலே கொஞ்சம் பார்வை வந்து விட்டாலும் போதும். என் பேரனை மடியிலே வச்சிட்டு இந்தப் போக்கிரிப் பொண்ணை ஒரு பிரம்பாலே நல்லா அடிக்கச் சொல்லப் போறேன்.'' பச்சிளங் குழந்தை போல் சிரித்தாள். திடீரென்று தாங்க முடியாது விம்மி அழத் தொடங்கி விட்டாள்.

''மூணு வருஷமாச்சு... இந்தப் பாவி... என் குழந்தை முகத்தைப் பார்க்காம...'' இரைந்தாள்.

''ஆச்சு. இன்னும் இரண்டு நாளிலே வந்துடப் போறார் உங்க மகன். கவலையை விடுங்க'' சமாதானப்படுத்தினார் குருநாதன்.

''அத்தை! என்ன இப்படி மனசை அடிக்கடி அலட்டிக்கிறீங்க? இன்னும் ரெண்டே நாள்தான் இருக்கு. அதுக்குள்ளே....'' சொல்லிக் கொண்டு நெஞ்சம் நெகிழ்ந்தவளாகத் துண்டினால் மெல்ல அவளது கண்ணீரைத் துடைத்து விட்டாள் அகல்யா.

''நான் ரொம்பச் சந்தோஷமா இருக்கேன். அதனாலே நீங்க மறுக்காம இருந்து சாப்பிட்டுவிட்டுத்தான் போகணும்.'' பஞ்சரத்தினம் சம்பந்திக்கு உத்தரவிட்டாள்.




''பாயசம் வைக்கப் போறேன் அப்பா; நீங்க அத்தை பேச்சைத் தட்டக்கூடாது.'' மகள் மேல் உத்தரவு போட்டாள்.

முகத்தை துண்டால் துடைத்துக் கொண்டு முறுவலித்தார் குருநாதன்.

''பாயசம் மட்டும் கொடு அம்மா சாப்பிடறேன்...உங்கம்மா சமைச்சு வச்சுக் கட்டுக் காத்திருப்பா. இந்த மகிழ்ச்சிகரமான சேதியை அவளுக்கு நான் போய்ச் சட்டுனு சொல்ல வேண்டாமா?'' குருநாதன் கொள் கையை விட்டுக் கொடுக்காது கேட்டார்.

கொஞ்ச நேரத்தில் அவர் விடைபெற்றுக் கொண்டு கிளம்பி விட்டார். அதற்குப் பின் அகல்யாவுக்கு நிற்கப்பொழுது இருக்கவில்லை. சிங்காரம் கொண்டு வந்து பத்திரமாகப் பின் அறையில் சேமித்து வைத்த செவ்விளநீர்க் காய்களை எண்ணிப் பார்த்தாள்.

ராஜ்குமார் தினமும் ஒரு தடவையாவது இளநீர் சாப்பிடாது இருக்க மாட்டான். அதுவும் தோட்டத்துச் செவ்விளநீர் அவருக்கு மிகவும் பிடித்தமான பானம்.

அவனை நினைத்துக் கொண்டே பின்பக்கம் விரைந்தாள். புடலங்காய் பந்தலில் பிஞ்சுகளாகத் தொங்கிய காய்களை மெல்லத் தொட்டுப் பார்த்து முகர்ந்தாள். ம்... வாசனைப் புடலை. கூட்டு என்றால் அவருக்கு ரொம்பப் பிடிக்குமே.....

வந்தவுடன் வரிசையாக அவருக்குப் பிடித்ததெல்லாம் சமைத்துப் போட்டுவிட்டுத்தான் மறு காரியம். நாக்குச் செத்து... ருசிகெட்டு இளைக்கத் துரும்பாகித்தான் வரப்போறார். என்னென்னவோ எண்ணியபடி நின்றவள். காதுகளில் சைக்கிள் மணி ஓசை கேட்டது! ஒரே ஓட்டமாக வாசலுக்கு விரைந்தாள். தந்திச் சேவகன் கையிலிருந்த உறையைக் கண்டதுமே அவள் நெஞ்சு படபடக்கத் தொடங்கியது.

கையெழுத்திட்டுவிட்டுப் பிரித்தாள்:

''சென்னைக்கு வந்து விட்டேன்.... வியாழன் காலையில். என்னை எதிர்பார்க்கலாம். அன்புடன் ராஜ்குமார்''

மகிழ்ச்சியின் சுமை தாங்காது இதயம் இரண்டாகி விடும்போன்றதொரு தவிப்பிலே அவள் ஆடிப் போய்விட்டாள். தன் உணர்வுகளை அடக்கிக் கொண்டு மெல்ல உள்ளே வந்தாள்.

''சைக்கிள் மணி சத்தம் கேட்டதே அகல்யா, தந்தி வந்திருக்கா? குழந்தை எப்ப வரானாம்? சொல்லும்மா... என் கண்ணு என்னிக்கு வரதாகத் தந்தி கொடுத்திருக்கான்....'' பஞ்சரத்தினம் பதறியபடி நாற்காலியிலிருந்து எழுந்து நின்றாள்.

ஓடிச் சென்று மாமியாரைத் தழுவிக் கொண்டு மெல்ல உட்காரவைத்தாள். ''பதறிப்படாதீங்க அத்தை அவர்... அவர்... வியாழக் கிழமை காலையிலே வந்துடறதாகத் தந்தி கொடுத்திருக்கார்... ரொம்பக் கிட்டக்க வந்துட்டார் அத்தை...'' மருமகள் ஆனந்தத்துடன் மாமியார் கழுத்தைக் கட்டிக் கொண்டாள்.

இருவர் கண்களும் கனத்தன. நெஞ்சிலே இனிமையான உணர்வுகள் சிலிர்த்தன.

(தொடரும்)

உ

ஸ்ரீ வேங்கடாசலபதி துணை
ஸ்ரீ கைலாசநாத ஸ்வாமி துணை



# வரகூர்

## ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள், ஸ்ரீ கைலாசநாதர் ஸ்வாமி ஸ்ரீ ஐயனார் கோயில்களின் திருப்பணி

ஸ்ரீ நாராயண தீர்த்தரின் தீராத வயிற்று வலியை வராக ரூபமாக வந்து தீர்த்து வைத்து அதன் காரணமாக ''வராஹபுரி (வரகூர்)'' என்று பெயர் பெற்ற ஸ்தலம். தனது தீராத வயிற்று வலியை தீர்த்து குணப்படுத்தியமைக்கு காரணமாக இறைவனுக்கு தனது க்ருதஞ்ஞதையை தெரிவித்துக் கொள்ளும் வகையில் ஸ்ரீ கிருஷ்ணலீலா தரங்கிணி என்ற மிக உன்னதமான காவியம் அவரால் இயற்றப்பட்டு இறைவனும் அங்கீகரிக்கப்பட்டு அரங்கேற்றம் பட்ட புகழ் பெற்ற ஸ்தலம்.

ஸ்ரீ நாராயண தீர்த்தரால் உருவாக்கப்பட்ட ''பஜனை சம்பிரதாய முறைப்படி வருடா வருடம் நடைபெற்று வரும் வரகூர் உறியடி'' (VARAGUR URIYADI) என்ற உத்ஸவம் மிகப் பிரசித்தமானது.

இத்தலம் சிறப்புக்கும் காரண பூதராக விளங்குபவரும் பக்தர்களின் தீராத வினைகள் யாவும் தீர்த்து வைத்துக்கொண்டு பிரத்யக்ஷ தெய்வமாக விளங்கி வரும் கலியுக வரதன் **ஸ்ரீ அலர்மேலு மங்கா சமேத ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளுக்கும், ஸ்ரீ ஆனந்தவல்லி அம்பாள் சமேத ஸ்ரீ கைலாசநாதர் ஸ்வாமிக்கும்,** பூமி ராஜரால் பிரதிஷ்டை செய்யப் பட்டு வரகூர் காத்தபெருமாள் என்ற அகாரங்களால் விளங்குகிற பீடத்தில் அமர்ந்திருக்கும் கிராம தேவதையான ஸ்ரீ ஐயனாருக்கும் கோவில் திருப்பணிகள் துவக்கி பூர்த்தி செய்து மஹா கும்பாபிஷேகம் செய்வதென்று ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள் ஆக்ஞையையும், அனுக்ரஹத்தையும் பெற்றுக்கொண்டு திருப்பணி துவக்கப் பட்டுள்ளது.

''நிர்மாணம் ஆதேன மஹாதேவாலய ததோதிகம் ஜீர்ண சமுத்தீர்த்ரா'' என்ற மஹான்களின் வாக்கை அனுசரித்து நூதனமாக ஆலயங்கள் கட்டுவது மிகப் புண்ணியம். அதை விட எல்லை கடந்த புண்ணியம் ''ஜீர்ணோத்தாரணம் செய்வது'' என்பதை அறிந்து மேற்படி ஆலயங்களின் திருப்பணிகள் நடைபெற அன்பர்கள் அனைவரும் நிறைவப் பொருளுதவி செய்து இறைவன் திருவருளை பூரணமாக அடைய பிரார்த்திக்கிறோம்.

வரகூர் கிராமம், சுபமஸ்து. இங்ஙனம்,

14—8—79

**திருப்பணிக் கமிட்டி,**

பரம்பரை தர்மகர்த்தாக்களும், கிராம பொதுமக்களும்

---

குறிப்பு: வங்கி செக்குகள், டிராப்டுகள் ''ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள், ஸ்ரீ கைலாசநாதர் ஸ்வாமி கோயில்கள் திருப்பணி நிதி'' (Renovation Fund) பெயரில் வாங்கி திரு. V. A. Balakrishnan, Secretary & Treasurer Renovation Committee, Varagur, 613101 (Thanjavur Dist) என்ற முகவரிக்கு அனுப்பக் கோருகிறோம்.

# நான் கண்ட ரஷ்யா

அகிலன்



## 11. குறிஞ்சி நிலக் குடியரசு

திரும்பிய பக்கமெல்லாம் இயற்கை எழில் சூழ்ந்திருக்கும் நகரம் டிபிலிசி (Tiblisi). நகரத்துக்கு மத்தியிலும் நகரத்தைச் சுற்றிலும் பசுமை போர்த்திய கம்பீரமான குன்றுகள். நகரத்தின் மையத்தில் ஆழமும் அகலமும் கொண்ட கூவா நதி சலசலத்து ஓடுகிறது. குன்றுகளையும் அவற்றின் சரிவுகளில் வீடுகளையும் பார்த்தபோது எனக்குப் பெரியதொரு கோடைக்கானலுக்கு வந்து விட்டது போலிருந்தது.- இதுதான் ஜார்ஜியக் குடியரசின் தலைநகரம். ஸ்டாலின் பிறந்து வளர்ந்த மாநிலத்தின் பெருநகரம்.

ஸ்டாலின் தங்கள் குடியரசைச் சேர்ந்தவர் என்பதால், அவரிடம் ஜார்ஜியர்களுக்குத் தனிப் பற்றுதல் உண்டு என்பதை வெளிப்படுத்த மாஸ்கோவில் வேடிக்கையான சில கதைகள் உலவுகின்றன. அவற்றில் ஒன்றை மட்டும் கூறுகிறேன்.

ஸ்டாலின் இறந்த பிறகு, அவர் பெயர் தாங்கிநின்ற பல இடங்களுக்குப் பெயர் மாற்றம் செய்யப்பட்டது. 'ஸ்டாலின் கிராட்' என்ற நகரத்தின் பெயர் 'வோல்காகிராட்' என்று மாற்றப்பட்டது. அந்த நகரத்திலிருந்து ஓர் அலுவலர் டிபிலிசிக்கு மாற்றலாகி வந்தார். அவருடைய 'பாஸ்போர்ட்'டைப் பதிவு செய்யும் அலுவலகத்துக்குச் சென்றார்.

''நீங்கள் எங்கே இருந்து வருகிறீர்கள்?'' என்று கேட்டார் ஜார்ஜிய அதிகாரி.

''வோல்காகிராடிலிருந்து.''

''எங்கே இருந்து வருகிறீர்கள்?'' கோபத்தோடு மீண்டும் கேட்டார் அவர்.

''வோல்காகிராடிலிருந்து.''

கோபம் உச்சகட்டத்தை அடைந்தது. ''எங்கே இருந்து வருகிறீர்கள்?'' என்று கத்தினார், மூன்றாவது முறையாக.

''வோல்கா கிராடிலிருந்து.'' — மீண்டும் அதே பதில் வந்தது.

''இல்லை! நீங்கள் ஸ்டாலின்கிராடிலிருந்து வருகிறீர்கள்! ஸ்டாலின்கிராடிலிருந்து வருகிறீர்கள்! ஸ்டாலின்கிராடிலிருந்து வருகிறீர்கள்!'' என்று கூச்சலிட்டுக் கொண்டே, ஓங்கி ஓங்கி மூன்று முறை முத்திரைகளை அந்தப் பாஸ்போர்ட்டில் பதித்தார் அந்த ஜார்ஜிய அதிகாரி!

இப்படிச் சில நகைச் சுவைக் கதைகள் ஜார்ஜியாக்காரர்களைப் பற்றி மாஸ்கோவில் உலவுவது உண்டு. அவற்றில் மற்றொன்று ஜார்ஜியாக்காரர்கள் பணக்காரர்கள் என்பது.

'சோவியத் நாட்டில் ஏழையாவது? பணக்காரராவது?' என்று நான் வியந்திருக்கிறேன். ஆனால் அங்கே எல்லோருக்கும் சம வாய்ப்புக்களும் வசதிகளும் இருந்தாலும், அவரவர் தகுதிக்கும் திறமைக்கும் உழைப்புக்கும் ஏற்றபடி ஓரளவு ஏற்றத்தாழ்வுகள் இருக்கத்தான் செய்கின்றன. அதேபோல் ஒவ்வொரு குடியரசிலும் உள்ள இயற்கை வளத்துக்கும் உழைப்பாற்றலுக்கும் தக்கபடி வேறுபாடுகள் காணத்தான் செய்கின்றன. நம்முடைய நாட்டில் உள்ளதுபோல், அடுத்த வேளைச் சோற்றுக்கில்லாத பரம ஏழையும் பத்துத் தலைமுறைச் சொத்துக்களைப் பதுக்கி வாழும் பணக்காரரும் அங்கு இல்லைதான்.

என்றாலும் நடுத்தர வர்க்கம், மேல்மட்ட நடுத்தர வர்க்கம், கீழ்மட்ட நடுத்தர வர்க்கம் என்று நாம் மதிப்பிடுகிறோமல்லவா? அந்த அளவுக்குச் சிறிதளவு வேறுபாடுகள் அங்கு இருக்கவே செய்கின்றன. வருமானத்தைப் புத்திசாலித்தனமான முறைகளில் செலவிட்டுச் சேமிப்பவர்களும் அங்கே இருக்கிறார்கள். வருவதையெல்லாம் குடித்துக் கெடுத்துவிட்டுத் தங்களைத் தாங்களே சிரமப்படுத்திக்







⌘ ஜார்ஜிய நாட்டுப்புற நடனம்.

⌘ குன்றிலிருந்து பிளிஸி நகரத்துக்கு வரும் கயிற்று வழிக் கூண்டு ரயில்.

⌘ பிளிஸி நகரப் பல்கலைக் கழகத்தின் முகப்பு வாயில்.

கொள்பவர்களும் இருக்கிறார்கள்: வேலைகளில் தங்கள் உழைப்பாலும் பயிற்சியாலும் படிப்படியாக முன்னேறி அதிக ஊதியம் பெறுவோரும் உண்டு. ஒரே வேலையைக் காலமெல்லாம் பார்த்து ஓய்வு பெறுவோரும் உண்டு.

ஜார்ஜியாக்காரர்களில் பலர் பணக்காரர்கள்தாம் என்பது பிளிஸி நகரத்தை நான் சுற்றிப் பார்த்தபோதுதான் தெரிந்தது. வீட்டுக்கு வீடு, தெருவுக்குத் தெரு, வரிசை வரிசையாகக் கார்கள் நிறுத்தப்பட்டிருந்தன. நகரத்தின் தெருக்களிலும் ஏராளமான கார்கள் தென்பட்டன. ரஷ்யாவில் நான் கண்ட நகரங்களிலேயே, மக்கள் தொகை விகிதாசாரப்படி பார்த்தால், பிளிஸியில் தான் மிகுதியான கார்கள் இருக்க வேண்டுமென எனக்குத் தோன்றுகிறது. ரஷ்யாவின் பெரும் பகுதிக்கு அது தேயிலையையும் உயர்தரமான மதுபானங்களையும் அனுப்புகிறதாம். திராட்சை, தேயிலை, மற்றும் உணவுப் பொருள்கள் அங்கே அதிக விளைச்சல் என்று கேள்விப்பட்டேன்.

இயற்கை வளத்தால் மட்டிலும் அங்கே செல்வம் கொழிக்கவில்லை. படிப்பும், பயிற்சியும், அந்தப் படிப்பும் பயிற்சியும் கருவியெனக் கொண்டு உழைக்கும் மனிதக் கூட்டமும் அங்கே நிறைந்திருக்கிறது. ஜார்ஜியப் பல்கலைக் கழகத்துக்கு ஜூன் 28-ம் தேதி முற்பகல் நான் சென்ற போது, அந்த நாட்டின் வளத்தில் அதற்குள்ள பங்கை என்னால் சிறிது புரிந்து கொள்ள முடிந்தது.

ஜார்ஜியக் குடியரசின் மொத்த மக்கள் தொகை ஐம்பதே லட்சம்தான். அதன் மக்களில் பெரும்பாலோர் புரட்சிக்கு முன்புவரை மலைக்காடுகளிலே வாழ்ந்த மலைவாழ் மக்கள். புரட்சி முடிந்தவுடன் 1918-ம் ஆண்டில் பிளிஸியில் அந்தப் பல்கலைக் கழகம் தோற்றுவிக்கப்பட்டிருக்கிறது.

பிளிஸி பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் எங்களுக்கு அதன் பணிகளை விளக்கினார். 17,000 மாணவ மாணவிகளைக் கொண்ட அந்தப் பல்கலைக் கழகத்தில், மருத்துவம், பொறி இயல், வேளாண்மை போன்ற 18 பிரிவுக் கல்விகள் அளிக்கப்படுகின்றன. புறவாழ்க்கை வசதிக்கான கல்வி மட்டிலுமின்றி படைப்புக்கலை, எழுத்துப் பிரிவான நாவல், சிறுகதை, கவிதைப் பகுதி, ஓவியம், நாட்டியம், நாடகம்,

இசை, சர்க்கஸ், பண்பாடு போன்ற ஒவ்வொன்றுக்கும் ஒரு பகுதி தனித்தனியே இருக்கின்றன.

அந்தப் பல்கலைக் கழகத்தைத் தவிர, நகரில் 19 வகை தொழிற்பயிற்சிப் பள்ளிகள் பல்வேறு பகுதிகளில் 25000 மாணவ மாணவிகளுக்குத் தொழிற் கல்வி தருகின்றன. வழக்கமான தொடக்கப்பள்ளி, உயர்நிலைப் பள்ளிகள் தவிர, அந்த நகரில் மட்டும் 42000 இளைஞர்கள் சிறப்புப் பயிற்சி பெற்று வந்தது என்னை வியக்கச் செய்தது. 50 லட்சமே மக்கள் தொகை கொண்ட ஒரு நாட்டின் தலைநகரத்தில் இந்த ஏற்பாடு!

பல்கலைக் கழகத்தில் இடம் போதவில்லை; ஆகவே நகரத்தின் ஏழு பகுதிகளில் அது இயங்குகிறது. நூறு கோடி ரூபிள் செலவில் புதிதாகக் கட்ட இருக்கும் பல்கலைக் கழகத்தின் 'மாடலை' எனக்குக் காண்பித்தார் துணை வேந்தர். மலைச்சாரலை அடுத்த விசாலமான பகுதியில் எழும்பவுள்ள பிரம்மாண்ட கட்டிடத்தின் மாடல். அந்த மாடலில் அங்கங்கே பூங்காக்கள், மரச்சோலைகள், காடுகள் உருவாக்கப்பட்டிருந்தன.

''கட்டிடங்கள் கட்டுவதோடு ஒன்றாக, மரம் செடி கொடிகளையும் திட்டமிட்டு வளர்த்துவிடுவீர்கள் போலிருக்கிறதே?'' என்றேன்.

''அவைதானே மாணவர்களுக்கு நல்ல காற்றை அளிக்கப் போகிற நுரைஈரல்கள்?'' என்றார் துணைவேந்தர்.

நம்முடைய நாட்டின் மலைப் பகுதிகளில் இயற்கையாக வளர்ந்துள்ள காடுகள் திருட்டுத்தனமாகவும் வெளிப்படையாகவும் அழிக்கப்படும் கொடுமையை நினைத்து நான் பெருமூச்செறிந்தேன். பருவ மழை அதனால் தவறுவது பற்றியோ, மக்களின் நுரையீரலுக்கு நல்ல காற்றுக் கிடைக்காதது பற்றியோ இயற்கைச் சூழ்நிலையில் விரும்பத் தகாத விளைவுகள் ஏற்படுவது பற்றியோ இங்கு யாரும் கவலைப்படுவதாகத் தெரியவில்லை. அங்கேயோ வீட்டுக்கு வீடு, தெருவுக்குத் தெரு, ஊருக்கு ஊர், காட்டுக்குக் காடு மரம் நட்டு வளர்ப்பதைத் தங்கள் தலையாய தேசியக் கடமையாகக் கருதுகிறார்கள். வெட்டப்படும் ஒவ்வொரு மரத்துக்கும் ஒன்பது மரங்கள் அங்கே நட்டு வளர்க்கப்படுகின்றன. பாலைவனங்களெல்லாம்கூடச் சோலைவனங்களாகக் குலுங்குகின்றன.

பல்கலைக் கழகங்கள், தொழிற்பயிற்சி நிலையங்கள், பள்ளிகள் இவற்றுக்கும், நாட்டு வளத்துக்கும், மக்களின் பொருளாதார–கலாச்சாரத்துக்கும் நெருங்கிய தொடர்பு இருக்க வேண்டும். அது அங்கே இருக்கிறது. ஒன்றுக்கொன்று தொடர்புள்ள ஒருங்கிணைந்த திட்டம் அமைத்து அங்கே அதைச் செயல்படுத்துகிறார்கள். சென்ற ஆண்டு நான் பீஹார் மாநிலத்துக்குச் சென்றிருந்தேன். அங்கு ஆறேழு பல்கலைக் கழகங்கள் இருக்கின்றன. பொதுப் பணத்தில் கோடிக் கணக்கான ரூபாய்கள் செலவிடப்படுகின்றன. எந்தப் பல்கலைக் கழகமும் அப்பொழுது இயங்கவில்லை. மாணவர்கள் தெருக்களில் ஊர்வலங்கள் நடத்திச் சாதிச் சண்டைகளும் கட்சிச் சண்டைகளும் போட்டுக் கொண்டிருந்தார்கள். ஆண்டுக்குச் சில மாதங்கள் கூட அவை ஒழுங்காக இயங்குவதில்லையாம்; சில பல்கலைக் கழகங்களில் தேர்வுகள் நடந்து பல ஆண்டுகள் ஆகிவிட்டன.

கங்கை முதல் பல நதிகள் வரை பாயும் இயற்கை வளமும் நிலக்கரி போன்ற கனி வளங்களும் நிறைந்த மாநிலம் அது. அத்தோடு இவ்வளவு பல்கலைக் கழகங்கள் வேறு! இருந்தும் அங்குதான் பயங்கரமான வறுமை, ஏற்றத் தாழ்வு, லஞ்ச ஊழல், கொலை கொள்ளை, வழிப் பறித் திருட்டு இவ்வளவும் நடைபெறுகின்றன. ஒழுங்கும் கட்டுப்பாடும் இயற்கை வளத்தையும் மனித சக்தியையும் ஒருங்கிணைக்கும் திட்டமும், நேர்மையும் திறமையும் கொண்ட செயலாக்கமும் இல்லாவிட்டால் ஒரு மாநிலம் என்ன ஆகும் என்பதற்கு எடுத்துக்காட்டு பீஹார். இதற்கு நேர் மாறாக விளங்கியது ஜார்ஜியக் குடியரசு.

பல்கலைக் கழகத்திலிருந்து நாங்கள் விடைபெறும்போது, அங்கு அந்நிய மொழிகள் பிரிவில் பணியாற்றிய நிக்கோலாய் எனும் ஹிந்தி மொழிப் பேராசிரியர் எங்களுடன் தொடர்ந்து ஓட்டலுக்கு வந்தார். அவர் இந்தியாவுக்குக் குடும்பத்தோடு வந்து ஹிந்தி மொழிபெயர்ப்பாளராகப் பணியாற்றியவர். ஹிந்திச் சிறுகதைகள் நாவல்கள் சிலவற்றை ஜார்ஜியன் மொழியில் மொழி பெயர்த்தவர்.

''இன்று மாலை எங்கள் வீட்டு விருந்துக்கு வந்து இந்த எளியவனைப் பெருமைப்படுத்த வேண்டும். நானே ஓட்டலுக்கு வந்து அழைத்துச் செல்கிறேன்'' என்றார்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



இந்த ஏழு சதுரங்களிலிருந்து சில குச்சிகளை நகர்த்தி இடமாற்றம் செய்வதன் மூலம் ஐந்து சதுரங்களை மட்டும் கிடைக்கும்படி செய்ய வேண்டும். முயன்று பாருங்களேன்.

—பானு சந்திரன்

விடை 39ம் பக்கம் பார்க்க

# அழகும் தரமும் இணைந்த அரிய படைப்பு!

## புதிய பிலிப்ஸ் வாலியண்ட்

### 4-பாண்டு டிரான்ஸிஸ்டர்களில் சிறந்தது ஒலித் தரமும் உயர்ந்தது!

அரிய அமசங்கள்:

- ஒலி, மற்றும் ஓசை நயத்திற்கென அழகிய கண்ட்ரோல்.
- வசதியான பாண்ட் தேர்வுக்கென. டீலக்ஸ் க்ரோம் புஷ் பட்டன்கள்.
- உருண்டையான குமிழ்.




**ரூ.595/-***

**பிலிப்ஸ்**

*சில்லறை விற்பனை உச்ச விலை, எக்ஸைஸ் வரி உள்ளிட்டது.
மாநில விற்பனை வரி மேலும் இதர தல வரிகள் தனி.




CASPR-656-172- TM







# பட்டு மலர் மேனிக்கு
# பாவையர் நித்தம் விரும்பும்
# விநிபா
## சந்தன முக பவுடர்







சருமத்திற்கு மென்மையும், பொலிவும் அளிக்கவல்ல மைசூர் சந்தனம், இந்திய அபூர்வ மூலிகைகள், மேனாட்டு வாசனை திரவியங்கள், உயர்ந்த அத்தர் வகைகள், தூய புனுகு, ஜவ்வாது, அரகஜா இவற்றை ஒருங்கே கலந்து விஞ்ஞான ரீதியில் நவீன மைக்ரோஃபைன் முறையில் தயாரிக்கப்படுகின்றன.




**விநிபா ப்ராடக்ட்ஸ்**

'கோகுல் கார்டன்ஸ்' கும்பகோணம்.

Caterina VP 3510 TM

விடை:



1, 2, 3 என்ற குச்சிகளை எடுத்து விட்டு படத்தில் கண்டபடி வைக்கவும்.

''விருந்துக்கு வருவோரில் ஒருவர் மரக்கறி சாப்பிடுபவர்!'' என்றேன் நான், என்னை நினைவில் வைத்துக் கொண்டு.

ஜார்ஜியக்காரர்கள் விருந்தோம்பலைப் பெரிதும் விரும்புபவர்கள் என்பதும் இந்தியர்களிடம் பரிவு கொண்டவர்கள் என்பதும் அங்கு தங்கிய சில நாட்களில் நன்கு புலப்பட்டது. நகரத்தின் பல பகுதிகளையும் டாக்ஸிகளில் சுற்றி வந்தோம். நகரத்தின் மத்தியில் நின்ற குன்றின் உச்சிக்குச் சென்று அங்கிருந்த ஓட்டலில் மதிய உணவை முடித்தோம். எங்களை ஏற்றிச் சென்ற டாக்ஸி டிரைவர்களில் ஒருவர் தமது வீட்டுக்கு ஒரு நாள் மாலை விருந்துக்கு வரவேண்டும் என்று எங்களை வற்புறுத்தத் தொடங்கிவிட்டார். நேரம் இருந்திருந்தால் அங்கும் சென்றிருப்போம். நேரமில்லை.

குன்றின் உச்சியிலிருந்து நகரத்தின் சம வெளிப் பகுதிக்குச் செல்ல, கயிற்று வழிப் பாதை வாகனங்கள் இருந்தன. அதில் செல்ல வேண்டும் என்று விரும்பினார் வித்யாலங்கார். நான் உடன்படவில்லை. டாக்ஸிக் காரர்களை நாங்கள் குன்றின் உச்சிக்கு அழைத்து வந்திருந்தோம். மேலும், கயிற்று வழி நாற்காலியில் நான் பீஹாரில் மலை யேறும்போது மின்சாரக் கோளாறினால் அந்தரத்தில் சிறிது நேரம் தொங்கும்படியாகிவிட்டது! ஜார்ஜியாவில் அப்படி நடக்காதென்றாலும், நான் சூடுபட்ட பூனையின் நிலையில் இருந்ததால், அந்த ஏற்பாட்டை மறுத்து விட்டேன்.

மாலையில் ஜார்ஜிய நாட்டுப்புறப் பாடல்களும் நடனங்களும் நிறைந்த ஓர் அற்புதமான நிகழ்ச்சியைக் கண்டு களித்தோம். மலைவாழ் மக்களாக — நாடோடிகளாக— அவர்கள் வாழ்ந்த காலத்தில் அவர்கள் ஆடிய நடனங்களையும் பாடிய பாடல்களையும் போற்றிப் பாதுகாத்துப் புதுமெருகேற்றிக் கொடுத்தார்கள். ஆண்களின் வாட்போர் நடனங்களும் மல்யுத்த நடனங்களும் மயிர்க்கூச்செரியவைத்தன. பெண்மணிகள் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பே உருவாக வந்து நளினமான நடனங்களை ஆடிச் சுழன்றார்கள். வண்ணங்கள், ஒலிகள், சுற்றுப்புறச் சூழ்நிலைகள், பாவங்கள் அனைத்தும் எங்களை மெய்ம்மறக்கச் செய்தன. கலைநிகழ்ச்சிகள் முடிந்தவுடன் விருந்துக்குச் சென்றோம்.

பேராசிரியர் நிக்கோலாய் வீட்டு வட்டமான பெரிய விருந்து மேஜையைக் கண்டவுடன், 'பேசாமல் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு ஜார்ஜியர் வீட்டு விருந்துக்கே போயிருக்கலாமே!' என்று தோன்றியது எனக்கு. விருந்தைப் பெரும்பாலும் மரக்கறி விருந்தாகவே மாற்றியிருந்தார் நிக்கோலாய். ஆப்ரிகாட், பீச், பிளம், செர்ரி, ஸ்ட்ராபெர்ரி, ஆப்பிள், தக்காளி என்று பல் வகைப் பழங்கள், வெள்ளரிக்காய், சிவப்பு முள்ளங்கி, காரட் முதலிய பச்சைக் காய்கறிகள், கொத்தமல்லி, சோம்பு இலை, புதினா, வெங்காயக் குருத்து முதலிய பச்சை இலைகள் —பச்சைக் காய்கறிகளையும் இலை தழைகளையும் சாப்பிட்டுப் பழக்கமுள்ளவனாதலால் முழு மூச்சோடு நான் அவற்றை ஒரு கை பார்க்கத் தொடங்கினேன். மற்ற நண்பர்களோ ஜார்ஜியாவுக்கென்றே உரித்தான பல வகை உயர்தரமான மது வகைகளில் தங்களை மூழ்கடித்துக் கொண்டிருந்தார்கள்.

நிக்கோலாயின் தாயாரும் பக்கத்து வீட்டு அம்மையாரும் வந்து ஓடி ஓடி உபசாரம் செய்தார்கள். அவர் மனைவி வெளியூர் சென்றிருந்தார். விருந்தை ஒரு வழியாக முடித்துக் கொண்டு, எழுந்திருக்க முடியாமல் எழுந்து, தட்டுத் தடுமாறி நடந்து, நிக்கோலாயின் நண்பர் காரில் பத்திரமாக ஓட்டலுக்கு வந்து சேர்ந்தோம்.

''நாளை, மத்தான் பாக்டரி ஒன்றுக்கும் இருதய நோய் மருத்துவ மனைக்கும் சென்று பார்த்துவிட்டு, மாலையில் பாகூ நகரத்துக்கு ரயிலேறுகிறோம்'' என்றார் மெரீனா. ஜார்ஜியா தேயிலை உற்பத்திக்குப் பெயர் போன குடியரசல்லவா? அது பற்றித் தெரிந்து கொள்ள ஆர்வம் கொண்டோம்.

(தொடரும்)



அவர்: ''அங்க வர்ற பஸ் 28தானே? கொஞ்சம் பார்த்துச் சொல்லுங்க.''
இவர்: ''பஸ்ஸா, எங்க வருது?''

- எஸ். சங்கரநாராயணன்



# மன்னிப்பா? வைராக்கியமா?

## —ஐ.ஜே.ராவ்—

நான் அப்போது ஆக்ராவுக்கு வந்து இரண்டு மாதங்களாகி யிருந்தன. அன்று மார்ச் மாதத்தில் ஒரு நாள் மாலை நேரம். தன்னந் தனியாக இருக்கப் பிடிக்காமல், ஷாஜஹான் கார்டன்ஸுக்குப் போனேன். எங்கேயும் உட்காரப் பிடிக்காமல் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தேன். திடீர் என்று விஜயா கண்களில் பட்டாள்.

நான் பேசலாமா என்று முடிவு செய்வதற்கு முன்பே அவள் என்னைப் பார்த்து, ''ஜகன்! நீங்கள் இங்கேதான் இருக்கிறீர்களா? என்ன ஆச்சரியம்!'' என்று சொல்லிக் கொண்டே வந்தாள்.

அவளுக்கு வணக்கம் செலுத்திவிட்டு அவள் பக்கத்தில் நின்று கொண்டிருந்த பெண்ணைப் பார்த்தேன். அறிமுகப்படுத்தி வைத்தாள் — சுஜாதா என்று. அவள் எனக்குப் பதில் நமஸ்காரம் செய்துவிட்டு, காலியாக இருந்த பெஞ்சில் உட்காரப் போனாள்.

விஜயா எனக்கு எவ்வளவோ நெருக்கமானவள். அவள் கணவர் தில்லியில் இருந்தார். அவள் கல்கத்தாவிலிருந்தபோதே எனக்கு நன்றாகத் தெரியும். எங்கள் பிளாட்டுக்குப் பக்கத்துப் பிளாட் அவர்களுடையது. நான் அங்கு போன சில நாட்களிலேயே அவள் என் சிநேகிதியாகி விட்டாள். என் போஷகர் ஆகிவிட்டாள். இரண்டு ஆண்டுகள் ஒய்வு பெற்று எல்லோரும் இங்கே வந்திருந்தார்கள்.

இப்படி எல்லா விஷயங்களும் பேசி முடித்த பின், ''தவறாமல் எங்கள் வீட்டுக்கு வாருங்கள் ஜகன். அவர் ரொம்பவும் சந்தோஷப்படுவார். பேபியைக் கூட நீங்கள் பார்க்க வேண்டுமல்லவா?'' என்று அன்புடன் மறு நாள் மாலை வரச் சொன்னாள்.

''உங்கள் சிநேகிதிக்குக் கோபம் வந்திருக்கும்போலிருக்கிறது'' என்றேன் தூரத்தில் உட்கார்ந்திருந்த சுஜாதாவைப் பார்த்து.

''அவளுக்கு ஆண்கள் என்றாலே கோபம் தான்'' என்றாள் விஜயா.

நான் சிரித்துவிட்டேன்.

இருண்டுவிட்டது. எல்லாருமாக வெளியே போகப் புறப்பட்டோம். அவர்களை அழைத்துப்போக அவர்கள் நண்பர் கார் கொண்டு வருவதாகச் சொல்லி யிருந்தார். இன்னும் வரவில்லை.

நான் ''என் காரில் கொண்டு போய் 'டிராப்' செய்கிறேன், வாருங்கள்'' என்றேன்.

''நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள் சுஜாதா —அவள் முதன் முதலில் பேசிய வாக்கியம் இதுதான்.

''சத்காவில்'' என்றேன்.

''தயால்பாக் வரை வந்து மீண்டும் அவ்வளவு தூரம் திரும்பிப் போவது....''

''ஒரு கஷ்டமும் இல்லை, வாருங்கள்'' என்றேன்.

சுஜாதா காரின் பின் ஸீட்டில் உட்கார்ந்தாள். விஜயா என் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள்.

தபால் ஆபீஸ் அருகில் வந்தபோது, ''ஸாதருக்குப் போக வேண்டும். பழம் வாங்க வேண்டும். அந்தப் பக்கம் போங்கள்'' என்றாள் விஜயா.

ஸாதரில் காரை நிறுத்திவிட்டு, சுஜாதாவுடன் சொல்லிக்கொண்டு புறப்பட்டாள்:

''ஐந்து நிமிஷத்தில் வந்துவிடுகிறேன்; இங்கேயே இருங்கள்'' என்றாள் விஜயா.

நான் என் ஸீட்டில் உட்கார்ந்து சிகரெட் பற்றவைக்கப் போனேன். சுஜாதாவின் நினைவு வரவே, இறங்கி வெளியே நின்று கொண்டு பற்ற வைத்துக் கொண்டேன். இரண்டு மூன்று தடவை சுஜாதா பக்கம் பார்த்தேன். அந்த மங்கல் ஒளியில் அவள் சரியாகப் புலப்படவில்லை. ஆயினும் அவள் மீது ஒருவகை அன்பு ஏற்பட்டது. ஏதோ விசேஷ காரணம் இருக்கிறது என்றல்ல. அவள் பார்க்க நன்றாகவே இருந்தாள். என்றாலும் பெரிய அழகி என்று சொல்ல முடியாது. இருந்தாலும் அந்தச் சற்று நேரப் பரிசயத்திலேயே ஒரு காரணமுமில்லாமல் அவள் பால் ஈர்க்கப்பட்டேன்.

விஜயாவின் வீட்டுக்குச் சென்றதும் பிரஸாத் என்னைக் கட்டி அணைத்து, எதிர் பாராத இந்தச் சந்திப்புக்கு எவ்வளவோ சந்தோஷப்பட்டான். ''வா, பேபியைப் பார்ப்போம்'' என்று உள்ளே அழைத்துப் போனான்.

இன்னும் ஓர் ஆண்டு நிறையவில்லை பேபிக்கு. எவ்வளவு அழகாக இருக்கிறது

கையில் எடுத்துக் கொள்ளலாம் என்றபோது அழத் தொடங்கியது.

மறுநாள் மாலை அவர்கள் வீட்டுக்குப் போனபோது சுஜாதா தில்லிக்குப் போய் விட்டாள் என்றாள் விஜயா. ''அவள் அப்பாவுக்கு ஜுரமாக இருக்கிறதாம். காலையில் டெலிபோன் வந்தது'' என்றாள், என்னைச் சோதனை செய்வது போலப் பார்த்துக் கொண்டே.

தொடர்ந்து, ''அப்படியே... நாங்கள் இந்த ஊரை விட்டுப் போவதற்குள் அவள் விலாசம், டெலிபோன் நம்பர் எல்லாம் வாங்கிக்கொள்ளுங்கள்'' என்றாள்.

''அவ்வளவு ஒன்றும் பரிச்சயமில்லை'' என்றேன்.

''எனக்குத் தெரியாதா தம்பி!...வேண்டுமானால் இதை பேபிக்குச் சொல்லுங்கள்!'' என்றாள் விஜயா.

அதற்குப் பிறகு நடந்ததெல்லாம் வெகு வேகமாக நடந்து விட்டன.

இரண்டு மாதங்களாக அவளைப் பார்க்க வேண்டும் என்று துடித்தேன். கடைசியில் அவள் அப்பாவின் விருப்பப்படி தில்லிக்கு வந்து அவளைச் சந்தித்தால், அந்தக் கணத்தில் இதென்ன கூச்சம், இதென்ன வெட்கம்! இதென்ன பயம்... இதென்ன நெர்வெஸ்னெஸ்?

''அப்பா எங்கே?'' என்றேன்.

''அவரும் அண்ணாவும் ஒரு டின்னருக்குப் போயிருக்கிறார்கள். ஏன்? அவர்களை வருமாறு டெலிபோன் செய்யட்டுமா?'' என்றாள் சுஜாதா.

''உங்கள் இஷ்டம்... அவர் எனக்குப் போன் செய்தார்!''

''ஆமாம்...''

''எதற்கு என்று புரியவில்லை.''

''எனக்குத் தெரியும் — சொல்லட்டுமா?''

''சொல்லுங்கள்.''

''விஜயா உங்கள் வீட்டாரோடு கலந்து பேசி என் அப்பாவுக்கு ஓர் எண்ணத்தை ஏற்படுத்திவிட்டாள்... பெரும்பாலும் இந்த விஷயம் உங்களுக்குத் தெரியாது என்று நினைக்கிறேன்.''

''சொல்லுங்கள்.''

''உங்களுக்கு மணம் முடித்து வைக்கவேண்டும் என்று.''

''அப்புறம்?''

''பெண்ணைக் கொடுக்கு முன் பரீட்சை செய்து பார்க்க அப்பா உங்களை வரச் சொல்லியிருக்கிறார்.''

''பின்னே அவரில்லையே பரீட்சித்துப் பார்ப்பதற்கு?'' என்றேன்.

''பெண்ணிடம் முதலில் பாஸாக வேண்டும். அதற்குப் பிறகு ஜாயிண்ட் பரீட்சையில்....''

அந்தக் கணத்தின் இனிமை மட்டுமின்றி, முக்கியத்துவமும் என்னை ஆட்கொண்டன.

''இவள் என் வாழ்க்கைத் துணைவியாகி எனக்கு இன்பமூட்டுவாளா? இவள்தான் சுகப்படுவாளா? நவநாகரிகச் சூழ்நிலையில்



வளர்ந்த இவள் என்னவெல்லாம் கனவு கண்டிருப்பாளோ!

முன் அறையில் — டிராயிங் ரூமில் — சிகரெட் பாக்கெட்டை வைத்துவிட்டு வந்துவிட்டேன். ஆனால் இந்தக் கணத்தில் சிகரெட் மிக அவசரமாகத் தேவைப்பட்டது. ஆயினும் அந்த நிமிஷத்தின் வார்த்தைக் கெட்டாத வனப்பை, எழுந்து சென்று ஏற்படும் சலனத்தால் கலைக்க விரும்பவில்லை.

சட்டென்று சுஜாதா எழுந்து போய் என் சிகரெட் கேஸையும் லைட்டரையும் கொண்டு வந்து கொடுத்தாள். பால்கனியின் மின்சார விளக்கை அணைத்து ''இப்பொழுது நன்றாக இருக்கிறதா?'' என்று கேட்டாள்.

''ரொம்ப நன்றாக இருக்கிறது'' என்றேன் வியப்போடு.

''இந்த அழகான மாலை நேரம் உங்களுக்கு நினைவுபடுத்துவது என்ன?'' என்று மெல்ல அமைதியாகக் கேட்டாள்.

அவள் கேள்வி எனக்குப் புரியவில்லை. என் உள்ளத்து எண்ணங்களை அவள் ஊகித்து அறிந்துகொண்ட பாங்கு எனக்களித்த வியப்பினின்று இன்னும் விடுபடவில்லை.

''விசேஷமாக ஒன்றுமில்லை'' என்றேன்.

நெடுமூச்சு விட்டு, ''அப்படியானால் உங்களுக்கு மறதி அதிகமாக இருக்க வேண்டும். அல்லது பொய் சொல்லுகிறீர்களோ என்னவோ!'' என்றாள் சுஜாதா.

''என்னது இது... நீங்கள் சொல்வது?''

''ஞாபகப்படுத்தட்டுமா?... இதே மாதிரியானதோர் இரவு நேரம்... கல்கத்தாவில் உங்கள் ஃப்ளாட்டில் இதே மாதிரி ஒரு பால்கனி. அங்கு நீங்கள்...கலேகா...!''

''கடவுளே!''

எழுந்து நின்றுவிட்டேன். அவையெல்லாம் இவளுக்கு எப்படித் தெரிந்தது?... விஜயா சொல்லியிருப்பாளோ? அந்தச் சம்பவம் அவளைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. சுஜாதா அமைதியாக உட்கார்ந்து ''உண்மையாகச் சொல்லுங்கள் — அன்று என்ன நடந்தது?'' என்று கேட்டாள்.

''அதெல்லாம் விஜயா சொல்லவில்லையா?''

''அவளுக்குத் தெரிந்திருப்பதற்கும் நீங்கள் சொல்லவிருக்கும் உண்மைக்கும் அதிக வித்தியாசமிருக்கிறது.... சொல்ல வேண்டுமென்றிருந்தால் சொல்லுங்கள்... நான் கட்டாயப்படுத்துகிறேன்என்று எண்ணுகிறீர்கள்.''

அந்தக் கனிவான வார்த்தைகளின் பொருள் எனக்குத் தெரியும். கலேகா, இவளுக்கும் எனக்கும் இடையே வந்து நின்றுவிட்டாள். மனத்தை விட்டு கலேகா போய்

''பியூன் கொண்டுவருவது அர்ஜண்ட் பேப்பரா ஆர்டினரி பேப்பரான்னு எப்படித் தெரிஞ்சுக்கறுவே?''

''ஆர்டினரி பேப்பர்னு தூங்கிக்கிட்டே வருவான். அர்ஜண்ட் பேப்பர்னு கொட்டாவி விட்டுக்கிட்டே எந்திந்து வருவான்!... ஆ. இராமநாஸ்



எவ்வளவு காலமானாலும், உண்மையை அறியத் துடிப்பவர்கள்தாம் அவளைச் சகிக்க முடியாதவர்களாக இருக்கிறார்கள்.

ஆயினும் சுஜாதாவை ஏமாற்ற முடியவில்லை. என்னையும் நான் ஏமாற்றிக் கொள்ளாமலிருக்கத் தன்மான உணர்ச்சி என்னைக் காப்பாற்றியது.

''அவள் எனக்கு சிநேகிதி. அன்று ஏனோ வந்தாள். இன்று போல் அன்றும் மாலை நேரம் அழகாக இருந்தது. என் ஃப்ளாட்டில் யாரும் இல்லை.''

''......''

''எல்லா விவரங்களையும் சொல்லும் பொறுமை எனக்கில்லை. ஆனால் நம்புவதானால் ஒன்று சொல்கிறேன். அந்தச் சூழ்நிலைக்கும் சந்தர்ப்பத்துக்கும் நாங்கள் ஆட்பட்டோம் என்றாலும், எல்லையை மீறவில்லை நான்....''

''அப்படியென்றால்...?''

''புரியும் என்று எண்ணினேன். கலேகாவும் நானும் முத்தமிட்டுக் கொண்டோம் என்பது வாஸ்தவம்தான். ஆனால் உடனே நாங்கள் இருவரும் சுயநினைவுக்கு வந்துவிட்டோம்...''

கையிலிருந்த சிகரெட் சாம்பலாகிவிட்டது. அவளோடு என் எதிர்கால வாழ்க்கை என்னும் கனவும் இதே போலச் சாம்பலாகிவிட்டதோ என்று எண்ணிக் கொண்டேன். பத்துப் பன்னிரண்டு நிமிடங்கள் எங்களிடையே அமைதி நிலவியது. பெரும்பாலும் கலேகா தவிர வேறொரு எண்ணமுமில்லை.

பிறகு சுஜாதா எழுந்திருந்து ''வாருங்கள் சாப்பிடுவோம்'' என்றாள்.

''வேண்டாம். நான் புறப்படுகிறேன்!''

வெளிச்சம் போட்டு என் கண்களைக் கூர்ந்து பார்த்தாள். ''அது நடக்காது. ஜாயிண்ட் பரீட்சை வைக்கு முன் நீங்கள் என்னைச் சில கேள்விகள் கேட்பீர்கள் என்று நினைக்கிறேன்'' என்றாள்.

இதன் பொருள் எனக்குப் புரிந்த அந்தக் கணத்தில் அந்த அறையில் நின்று கொண்டிருந்த அவள் மிக அழகாகத் தெரிந்தாள்.

''அந்தக் கேள்வியை இப்பொழுதே கேட்டுவிடுகிறேன்'' என்றேன்.

கைகளைக் கட்டிக் கொண்டு ''கேளுங்கள்'' என்றாள் சுஜாதா.

''கலேகாவுடன் எனக்கிருந்த தொடர்பு பற்றிய கதையைக் கேட்ட பின்னரும் என்னை ஏன் மன்னிக்கிறீர்கள்?''

''இது கேள்வியல்ல — அபிப்பிராயம், கருத்து. இதைப் பற்றி நீங்கள்தான் சொல்ல வேண்டும்.... சாப்பிட வருகிறீர்களா?''

அடுத்த இரண்டு மாதங்களில் சுஜாதா எங்கள் வீட்டுக்கு வந்து விட்டாள். எத்தனை இனிய கணங்கள் எங்களிடை ஏற்பட்டாலும், எனக்கு அன்றைய தினம் மீண்டும் மீண்டும் ஞாபகத்துக்கு வந்த வண்ணம் இருந்தது. அவள் மனத்தில் அந்தக் கணத்தில் என்ன நிகழ்ந்ததோ என்ற கேள்வி என்னைப் பாடாய்ப் படுத்தி வந்தது. அது மன்னிப்பா? வைராக்கியமா? நம்பிக்கையா?

என்னது அது?

தமிழாக்கம்: **எஸ். வி. எஸ்.**

○ ஏ. எம். இராஜ், செங்கோட்டை
கே: உங்கள் படத்தை கல்கி அட்டையில் போட்டால் என்ன?
ப: உங்களுக்கும் எனக்கும் அப்படி ஆசை இருக்கிறது. சம்பந்தப்பட்டவர்களுக்கு இல்லையே!

○ இரா. இராமன், ஆத்தூர்.
கே: சினிமாவிற்கு முழுக்குப் போடுவதாகச் சொன்னவர்கள் மீண்டும் நடிக்கிறார்களே?
ப: சினிமா அழுக்கு எவ்வளவு முழுக்குப் போட்டாலும் போவதில்லை. ஆகவே திரும்பவும் நடிக்க வருகிறார்கள். மறுபடியும் முழுக்குப் போடுகிறார்கள். இது ஒரு தொடர்கதை!

○ கே. எம். இளங்கோ, குப்புச்சிபாளையம்.
கே: எதைப் படித்தாலும் சீக்கிரம் மறந்து விடுகிறதே?
ப: எதையும் உண்மையான ஆர்வத்துடன் படித்தால் மறக்காது. சினிமா கிசுகிசு படிக்கிறீர்களே, மறந்து விடுகிறதா? பிடித்ததைப் படியுங்கள். படிப்பவை களைப் பிடிக்கும்படி செய்து கொள்ளுங்கள். முதலில் நம்பிக்கையை வளர்த்துக் கொள்ளுங்கள்.

---

○ வி. ச. வாசுதேவன், பம்மல்
கே: மகாகவி பாரதியின் நூற்றாண்டு விழா வருகிறது. சிறப்பாகக் கொண்டாட யோசனைகளைத் தெரிவியுங்களேன்.
ப: எட்டயபுரத்தில் மகா கவி நினைவு மண்டபம் இருப்பதை மக்களுக்கு நினைவு படுத்தலாம். தமிழக சுற்றுலா பஸ்கள் அதைத் தொடும்படி பயணத் திட்டம் அமைக்கலாம். ரவீந்திர சங்கீதம் மாதிரி பாரதி பாடல்களை மட்டுமே கொண்ட பாரதி சங்கீத நிகழ்ச்சிகளை நடத்தலாம். பாரதியின் பெயரில் மாவட்டம் தோறும் கலை மண்டபங்கள் கட்டலாம். பாரதியின் பாடல் தொகுப்புக்களை அரசே மலிவு விலைப் பதிப்பாக வெளியிடலாம்— இத்தனை 'லாம்'களையும் செய்வார்களா என்பதே கேள்வி. பாரதி விழாவில் அரசியல் ஆதாயங்கள் கிடைக்காதே! ஆகவே அரசியல்வாதிகள் ஆர்வம் காட்ட மாட்டார்கள்.

---

○ கே. ரேவதி, சென்னை-33
எம். எஸ். ஸின், வாணியின், லதாவின் - இம் மூவரின் மீராப் பாடல்களில் தங்களுக்குப் பிடித்தது?
ப: எம். எஸ். ஸின் மீரா பாடல்களை எவையும் மீறு!

○ இ. முருகவேள், செங்கவல்லி.
கே: கண்கள் தானம் செய்ய விரும்புகிறேன். யாருடன் தொடர்பு கொள்ள வேண்டும்?
ப: எழும்பூரில் உள்ள கண் மருத்துவ மனை, நுங்கம்பாக்கத்தில் உள்ள சங்கர நேத்ராலயம் போன்று பல உள்ளன. யாருடனாவது தொடர்பு கொள்ளுங்கள்.

○ கே. சம்பத், வேலாயுதம்பாளையம்.
கே: சமீபத்தில் உங்களைக் கவர்ந்த படம் எது?
ப: 'ஸ்டாண்ட் அப் டெல்பீரு' என்ற யூகோஸ்லேவியப் படம். நீச்சலில் அபார ஆர்வம் உடைய பெண்ணை அவளது கோச் ஊக்கமூட்டி நிறைய பரிசுகள் பெறச் செய்கிறார். புகழும் விளம்பரமும் கிடைக்கிறது. பின்னால் ஒரு போட்டியில் அவள் தோல்வி அடைந்து விடுகிறாள். எல்லோரும் உதறிவிடுகிறார்கள் — அவளுடன் ஓட்டலில் வேலை செய்தவனைத் தவிர. அவன் அளித்த ஊக்கத்தால் இங்கிலீஷ் கால்வாயை நீந்திக் கடக்கிறாள். மறுபடியும் பெயர், புகழ், விளம்பரம் அவளை நெருங்கு கின்றன. எல்லாவற்றையும் உதறிவிடு கிறாள்—தன் காதலன் உட்பட. அபாரமான நடிப்பு. பெண்ணின் குறைந்த பேச்சும் நிறைந்த முக பாவங்களும் நெஞ்சில் இடம் பெற்றன.

○ டி. சிவமுருகன், கோயில்பட்டி.
கே: பேராசிரியர் கல்கியின் பாத்திரங்களில் எனக்குப் பிடித்தவர்கள் சாரதை, பூங்குழலி, தங்களுக்கு?









ப: கவர்ந்தவர்: நந்தினி. பிடித்தவர்: குந்தவை. நெஞ்சில் உறைந்தவர்: சீதா (அலை ஓசை).

○ வி. எஸ். பாலன், விருகம்பாக்கம்.
கே: தைரியமாக இருப்பது எப்படி?
ப: சுலபம். உங்கள் பயத்தை வெளியே காட்டிக் கொள்ளாதீர்கள். உதறல் வெளியே தெரியாதபடி பார்த்துக் கொள்வது தான் தைரியம்!

---

✕ ரூ. 5- பரிசு பெறுபவர்: வி. ச. வாசுதேவன், நல்லான் நிலையம், எல்.ஐ.சி. காலனி, சென்னை-75.

## அத்தியாயம் 4

"நீங்க இங்கேயே இருங்க... நான் போய்ப்பேசி அவனை அனுப்பிட்டு வரேன்'' நீல்கமல் பரபரத்தாள்.

''வேணும் நீல்... நான் பின் வழியாப் போயிடறேன்... என் அஸிஸ்டென்ட் வேறே திரும்பிட்டான். நாளைக்குச் சந்திக்கலாம்''

''வேண்டாங்க. நீங்க இப்பக் கௌம்பறது எனக்குச் சரியாப் படலே. அவன் தனியா வராம ஆட்களோட வந்திருக்கலாம். பார்த்துட்டாங்கன்னு இரண்டு பேரையும் தொலைச்சுடுவாங்க... நீங்க இங்கேயே பாத்ரூம்குள்ளே தாள் போட்டுண்டு இருங்க. அஞ்சு நிமிஷத்திலே வந்துடறேன்.'' கிழே விரைந்து போனாள்.

கதவைத் திறந்ததும் டேவிட் அவளை ஒரு மாதிரியாகப் பார்த்தான்.

அவன் 'வா'வென்று சொல்லாமலேயே ஹாலுக்குள் வந்தான்.

''கிழே வந்து கதவைத் திறக்கறதுக்கு இவ்வளவு நேரமா? கஷ்டமாரா?''

''சீச்சீ.... நான் ஒண்ணும் அப்படி இல்லே....''

''பின்னே எப்படி?''

''எப்படி இருந்தா உனக்கென்ன?''

''மாடிலே கொரல் கேட்டுதே!''

''தூக்கம் வரலே... டேப் போட்டுக் கேட்டுண்டு இருந்தேன்.. ஆமா... இந்த நேரத்துலே வந்து பெல் அடிக்கறயே, வந்த விஷயம் என்ன?''

''நின்னுக்குனு பேச முடியாது. வா மாடியிலே போய் உட்கார்ந்து பேசலாம்!''

''அதெல்லாம் முடியாது. இஷ்டமிருந்தா இங்கேயே விஷயத்தைச் சொல்லு. இல்லேன்னு வெளியே நட....''

''என்ன நீ பெரிசாப் பதிவிரதை மாதிரி பேசறே...''

''யோவ்... அனாவசியமா வார்த்தையை விடாதே. ஆமா சொல்லிட்டேன்... பாஸ் கிட்டே



நீ இப்படி நடந்துக்கறேன்னு ஜோஸ் மூலமா விஷயத்தை எட்ட விட்டுடுவேன். ஜாக்கிரதை!''

டேவிட் அடங்கிப் போனான்.

பேச்சைத் திருப்பினான்.

''நீ பாட்டுக்கு அந்த ஆளை சினிமா தியேட்டர்லேந்து கோட்டை விட்டு விட்டே. அவன் நேரா ஹோட்டல் ரூமுக்கு வந்துட்டான். நான் வகையா மாட்டிண்டேன்.''

''அப்புறம் என்ன ஆச்சு!'' ஒன்றும் தெரியாதது மாதிரி நீல் கமல் நடித்தாள்.

''அவன் எவர வியாபாரியே இல்லே. போலீஸ். நம்பளைக் கண்ணி வெக்கத்தான் வந்திருக்கான். நல்ல வேளையா தப்பிட்டேன். என்னை நல்லா அடையாளம் கண்டு பிடுச்சுடுவான். உன்னையும் அவனுக்குத் தெரியும். ஜாக்கிரதையா நடந்துக்கோ... உஷார்ப்படுத்தத்தான் வந்தேன்.''

''அவன் போலீஸ்னு 'பாஸு'க்கு நியூஸ் போயிடுத்தா?''

''உடனே போயிடுத்து....''

''ஜோஸ் மூலமா...?''

''இல்லே. வேறே ஆள் மூலம் அனுப்பிட்டேன். பாஸுக்குக்கூட உன் மேலே கோபம்.''

''நான் என்ன செய்யறது? தியேட்டர்லேந்து அந்த ஆளு திமிர்னு கௌம்பிட்டான். நான் எவ்வளவோ சொல்லியும் கேட்கலே. உடனே வெளியே வந்து அவனை ஃபாலோ பண்ணச் சொல்லி ஜோஸை அனுப்பிட்டேன். ஒரு பொம்பளையாலே வேறு என்ன செய்ய முடியும்....''

''நல்லாப் பேசறே... உன்னாலே எது முடியும், எது முடியாதுன்னு எனக்குத் தெரியாதா?''

''ம்...ம்... அப்புறம்?''

''இங்கே ஜோஸ் வந்தானா?'' டேவிட் நகருகிற வழியாக இல்லை.

''வரலே.... எனக்குத் தூக்கம் வரது.''

''இன்னிக்கு ஒரு ராத்திரி இங்கேயே தங்கிக்கிறேனே....'' டேவிட் கெஞ்சினான்.

''இன்னொரு நாள் பார்க்கலாம் போ.''

இஷ்டமில்லாமல் டேவிட் வெளியேறினான்.

கதவைத் தாழிட்டு நீல் கமல் மாடிக்கு வந்தாள்.

வினோத் கட்டிலில் உட்கார்ந்திருந்தான்.

''உங்க பேரையே சொல்லலியே?'' நீல் அவனைக் கேட்டாள்.

''அவசியம் தெரிஞ்சுக்கணுமா?'' வினோத் எதிர்க் கேள்வி கேட்டான்.

''என் மேலே உங்களுக்கு இன்னும் நம்பிக்கை வரலே.. நான் செஞ்ச பாக்கியம் அவ்வளவுதான்!'' வருத்தம் தோய்ந்த குரலில் நீல் சொன்னாள்.

''அதுக்குள்ளே அழறியே! வினோத்.''

''அழகான பேருங்க....''

மதன மிருத்தியுஞ்சயன்

# முற்றுப் பெறாத வாக்கியங்கள்..

''பேரு கிடக்கட்டும். உங்கிட்டேந்து நிறைய விஷயம் தெரிஞ்சுக்கணும். நாளைக்கு எங்கே சந்திக்கலாம்?''

''இப்பவே பேசலாங்க... டயர்டா இருக்கீங்க. படுத்துக்கங்க. படுத்துண்டே பேசலாம்.''

''என்னோட அஸிஸ்டெண்ட் வெளியிலே பனியிலே காத்துண்டு இருக்கான். நான் போகலேன்னா கதவை உடைச்சுண்டு அவன் உள்ளே வந்துடுவான்.''

''அவரையும் கூட்டிக்கினு வாங்களேன்!''

''அவன் உள்ளே வந்தான்னு நான் வெளியே போக வேண்டியதுதான். சொல்லு நாளைக்கு எங்கே வந்து உன்னைச் சந்திக்கிறது? ''

''நாளைக்கு நைட் இங்கேயே வாங்களேன்.''

''பெட் ரூம்லே சந்திக்கிறது வாணும்... பேச்சு திசை திரும்பிடும். வெளியே எங்கே மீட் பண்றது?''

''போன் நம்பர் எழுதித் தரேன். நான் வேலை பார்க்கிற இடம். காலை பதினொரு மணிக்கு மேலே போன் பண்ணுங்க. மீட் பண்ற இடத்தைப் பேசிக்கலாம்.''

''குட் ஐடியா.''

''நான் உங்களை வந்து சந்திக்கணும்னு எங்கேங்க வரது? செவன் ஹெவன் ஹோட்டல்லே இருப்பீங்களா?''

''உங்க ஆளுங்களுக்குத்தான் அந்த இடம் தெரிஞ்சு போச்சே. அங்கே இருக்க மாட்டேன். மல்லேஸ்வரத்துலே ரிலேடிவ் வீட்லே நாளை ஒரு நாள் இருப்பேன். நானே உன்னைக் காண்டாக்ட் செய்யறேன்.''

''எனக்கென்னமோ பயமா இருக்குங்க. நீங்க என்னோடே இருந்துடுங்களேன்.''

''சீ... இதென்ன கோழை மாதிரி பயப்படறே.... தைரியமா இரு..' எங்கிட்டே உண்மையா நடந்துக்கோ. உன்னைக் காப்பாத்தறது என் பொறுப்பு.''

''என்னை நம்புங்க....'' அவளது வலது கையை எடுத்துக் குனிந்து அவளது புறங்கையை உதடுகளால் முத்தமிட்டான்.

ஒரு காகித உருண்டை வந்து தொப்பென்று விழுந்தது.

வினோத் எடுத்துப் பிரித்துப் பார்த்தான்.

'நான் போகட்டுமா? — அருண்'.

சுருட்டிப் பாக்கெட்டில் போட்டுக்கொண்டான்.

''என்னங்க?''

''என் அஸிஸ்டெண்ட் சீக்கிரம் வரச் சொல்லி நோட்டீஸ் விட்டிருக்கிறான்! நான் வரேன்.''

''எதுக்கும் புழக்கடைப் பக்கமாவே போயிடுங்க.''

வினோத் பின் பக்கமாக வெளி வந்து வீட்டைச் சுற்றி முன் பக்கம் வந்தான்.



''தவணை முறை விற்பனையாளர் அமரர் தங்கப்பா அவர்களுக்குச் சிலை எடுக்க முடிவு செய்து, முதல் தவணையாக இப்போது சிலையில் ஒரு பகுதியைத் திறந்து வைக்கிறோம்!''

அருண் சேர்ந்து கொண்டான்.

விடியற்காலை மணி நாலு பத்து.

இருவரும் நடக்கலாயினர்.

இவர்கள் போன உடனே, நீல்கமல் வீட்டுக்கு எதிர் வாடையில் சற்றுத் தள்ளியிருந்த ஒரு முட்டுச் சந்திலிருந்து டேவிட் வெளியே வந்தான். வினோத்தும் அருணும் போவதை வெறித்துப் பார்த்தான்.

ஏதோ தீர்மானம் செய்தவனாகப் புறப்பட்டான்.

கிலாஸ்பாளையம் மார்க்கெட்டுக்குப் பக்கத்தில் ஒரு குடிசை.

நுங்கி ஒருபுறம் கிடக்க, அரை டிராயருடன் கையையும் காலையும் வெள்ளத்தில் உயிர்போன பிரேதம் போல் விரித்தபடி மல்லாந்து தூங்கிக் கொண்டிருந்தான் ஜோஸ்.

ஆழ்ந்த தூக்கத்திலிருந்தவனுக்குத் திடீரென்று தன்னை யாரோ உலுக்குவதை உணர்ந்ததும் ஏதோவோர் அச்ச உணர்வு, அனிச்சையாய்ப் பாய, தற்காப்புக்காகத் தொட்டவன் மீது பாய்ந்து கழுத்தைப் பிடித்துக் கொண்டான்.

''டேய் ஜோஸ்.... நான் டேவிட்டுடா டேய் விடுடா... விடுடா....'' என்று டேவிட் கத்திய பிறகுதான் பிடியை விட்டான்.

சுதாரித்துக்கொண்டு எழுந்தான்.

''என்ன தொரை.... திடீர்னு வந்து நிக்கறே?'' ஜோஸ் கேட்டான்.

''ஜோஸ், முக்கியமான விஷயம். நீல்கமல் நடத்தையே சரியில்லே...''

'ஹோ' வென்று ஜோஸ் சிரித்தான்.

''என்னு சிரிக்கிறே!''

''பெரிசா ஏதோ சொல்லப்போறேன்னு பார்த்தா.... நீல் கமல் நடத்தை சரியில்லேன்னு ஜோக் அடிக்கிறியே!''

''அது இல்லேப்பா... அந்த சி. ஐ. டி. பயல் விஷயமா எச்சரிக்கலாம்னு போனேன். மாடிலே எவனோடயோ இருந்தாப்பலே பேச்சுக் குரல் கேட்டது. யாருமில்லே அப்படின்னுட்டா. எதிர்ச்சந்துலே கொஞ்ச நேரம் நின்னுக்கினு பார்த்தேன். எங்கேயிருந்தோ அந்த சி. ஐ. டி. பயல் வந்து இன்னொருத்தனோடு சேர்ந்து போறான்... எனக்கென்னவோ அவ மேலே சந்தேகமா இருக்கு....''

''போவ்! எதையாவது பார்த்துட்டு ஏதாடயாவது முடிச்சுப்போடாதே... பாஸ் கிட்டே எதையாவது எட்ட விடப் போறே... அவளைத் தீர்த்துக் கட்டிடுவார். அப்படியே அவ கொஞ்சம் தடம் புரண்டு போறான்றது உண்மையாயிருந்தாலும் புத்தி சொல்லித் திருத்திடலாம். நம்பளோட இத்தனை வருஷம் ஒத்துழைச்சவ காட்டிக் கொடுத்திட மாட்டா. அவ வீட்டைக் கண்டு பிடிக்க வேவு பார்க்கத்தான் அந்தப் பய சுத்திண்டு இருந்திருப்பான். பாஸ் கிட்டே ஒரு வார்த்தை போட்டுட்டு அவனைத் தீர்த்துக் கட்டிடணும்....'' ஜோஸ் சொல்வது சரியாகப் பட்டது டேவிட்டுக்கு.

# இப்பொழுதே இவனுக்கு நான் கல்லூரிச் சம்பளம் கட்டுகிறேன். ஆனால் இவனே இன்னும் ஆரம்பப் பள்ளியையே எட்டவில்லை.

இதோ என் அருமை ராஹுல்.

மூன்று வயதாகும் அவன் இப்பொழுது-தான் மழலையில் பேச ஆரம்பித்துள்ளான். அதற்குள் நான், வருங்காலத்தில் அவனது மேற்படிப்புக்கான ஏற்பாடுகளைச் செய்து-விட்டேன்.

கல்லூரியில் படிக்கும்பொழுது அவன் என்னைப்போல் கஷ்டப்பட வேண்டாம்.

அதனால் யூகோபாங்கில் 120 மாதங்-களுக்கு "க்ரோ யுவர் மணி ஸ்கீமில்" சேர்ந்துள்ளேன் இதனால் என் மகனின் கல்லூரிச் சம்பளத்திற்கும் அதைச் சார்ந்த இதரச் செலவுகளுக்கும் கவலையின்றி இருக்கலாம்.

மாதாமாதம் ராஹுலின் கல்லூரிச் செலவை கவனித்துக் கொள்ள, இந்தத் தொகை முதிர்ந்த பின் அதை அப்படியே ஃபிக்சட் டெபாசிட் திட்டத்தில் சேர்த்து விடுவேன்.

வருங்காலத்திற்காக யூகோபாங்கில் சேமிப்பது அரிச்சுவடி படிப்பது போல் அத்தனை சுலபம்.

மேலும் விவரங்களுக்கு அருகாமையில் உள்ள எங்கள் கிளைக்கு இப்பொழுதே விஜயம் செய்யுங்கள்.

## யூகோபாங்க்

அளிக்கும் லாபகரமான டெபாஸிட் திட்டங்கள்

- சேவிங்ஸ் பாங்க் அகௌண்ட்ஸ் திட்டம்
- ஃபிக்ஸட் டெபாசிட் திட்டம்
- டெபாஸிட் ஸெர்ட்டிபிகேட் திட்டம்
- ரெகரிங் டெபாசிட் திட்டம்
- க்ரோ யுவர் மணி ஸ்கீம்
- டைனி ஸேவிங் ஸ்கீம்
- மாதாந்திர பென்ஷன் திட்டம்



**யுனைடெட் கமர்ஷியல் பாங்க்**

**உங்கள் அருகாமையில் உள்ள வசதியான பாங்க்**

UCO/CAS-49/79 TAM

''அவனுக்குத்தான் எச்சரிக்கை கொடுத்திருக்கோமே.... பொடியன் ஒழுங்கா நடந்துக்கலேன்னு சீவிட வேண்டியது தான்.....''

''நாளைக்கு எல்லோரையும் வரச் சொல்லி பாஸ் இட்டேந்து செய்தி வந்திருக்கே... உனக்குத் தெரியுமில்லையா?''

''ஓ!... அவ வரமாட்டா இல்லே....''

''பாஸ்தான் பொம்பளைங்களை எந்தக் கூட்டத்துக்கும் அழைக்கிறதே இல்லியே. எந்த பிளானையும் அவங்க இட்டே விவரமாச் சொல்லாதேன்னு எச்சரிப்பாரே....''

''அப்போ நான் வரேன் ஜோஸ். எதுக்கும் அவளை ஒரு பார்வையிலே வெச்சுக்கோ...'' டேவிட் கிளம்பிப் போனான்.

நீல் கமலை அந்தக் கூட்டத்துக்கு அறிமுகப்படுத்தியவனே ஜோஸ்தான்.

நீல் கமலின் அப்பன் சாராயத்தால் உயிரை விட்டபோது அவளுக்கு வயது நாலு. பிறந்ததுமே தாயைக் காவு வாங்கியவள். ஓர் ஆப்பக்கார ஆயாவிடம் வளர்ந்து வந்த அவளைச் சென்னையிலிருந்து பெங்களூருக்குக் கூட்டி வந்து ஒரு பணக்கார வீட்டில் வேலைக்கு வைத்தான். காலையிலும் மாலையிலும் வீட்டு வேலை செய்து, பள்ளிக்கும் போனாள்.

தள தள வென்று அவள் வளர வளர ஜோஸின் ஆசையும் வளர்ந்தது. மணம் செய்து வாழலாம் என்று கூட எண்ணினான்.

திடீரென்று ஒரு நாள் குலுங்கக் குலுங்க அழுதபடி வந்து நின்று, 'நான் மூன்று மாசம் முழுகவில்லை' என்றாள்.

பணக்காரனின் பிள்ளை அவளைக் கை கழுவிவிட்டான்.

ஜோஸின் ஆசையில் இடி.

கலைப்பதற்கு உதவினான்.

அப்போதுதான் 'கொள்ளைக் கும்பலுடன்' தொடர்பு ஏற்பட்டது அவனுக்கு. அவளையும் ஈடுபடுத்தினான். பணம் கிடைத்தது.

ஆனால் நாளா வட்டத்தில் நீல் கமலுக்கு அவன்மீது ஒரு வெறுப்பு உண்டாயிற்று. தானாகச் சம்பாதிக்கும் நிலை வந்ததனால் அவன் அவளைத் தேடி எப்போதாவது வந்தால்கூட மறுத்தாள்.

அவள் வெறுக்க வெறுக்க அவனுக்குள் அவள்மீதான ஆசை அதிகரித்தது.

விநோத்தைக் கண்டதும் அவனுடைய மாமா வீட்டில் எல்லோருக்கும் பெருத்த சந்தோஷம். மாமாவின் இரண்டு பெண்ணும், ஒரு பிள்ளையும் அவனைச் சூழ்ந்து கொண்டனர். அருணும் கூடச் சென்றிருந்தான்.

பல் தேய்த்துக் காப்பி சாப்பிட்டானதும் அருண் செவன் ஹெவனுக்குக் கிளம்பினான்.

''அருண் பீகேர்ஃபுல்... ஏதாவது விஷயம் நடந்துதுன்னு உடனே பறந்து இங்கே வந்துடு. வரமுடியாத சூழ்நிலைன்னு பக்கத்துலே இருக்கிற போலீஸ் ஸ்டேஷன்லே அசிஸ்டென்ஸ் வாங்கிக்கோ. ஈவினிங் நாலு மணி சுமாருக்கு



மானேஜர்: லாண்டரியிலே வேலை செய்த பையனைச் சர்வரா வேலைக்கு வைக்காதீங்கோன்னு சொன்னுக் கேட்டீங்களா?
முதலாளி: ஏன், இப்ப என்ன ஆச்சு?
மானேஜர்: சாப்பிட வந்தவன் தோசை ஆர்டர் பண்ணு அர்ஜண்டா ஆர்டினரியான்னு கேட்கிறான்!

-ஆர். கோபாலகிருஷ்ணன்

---

நான் உன்னை ஃபோன்லே காண்டாக்ட் செய்யறேன்.... ஓ.... கே....?''

''ஓ கே சார்.''

அருண் கிளம்பி விட்டான்.

தூக்கம் பிடித்துத் தள்ளிற்று விநோத்தைத் படுத்ததுதான் தெரியும்.

கண் விழித்தபோது பத்து மணி ஆகியிருந்தது. குழந்தைகள் பள்ளிக்குச் சென்று விட்டிருந்தன. மாமாவுக்கு ரிசர்வ் பாங்கில் வேலை. கிளம்பிப் போய்விட்டிருந்தார்.

அவசரம் அவசரமாக எழுந்து குளித்துச் சாப்பிட்டான்.

மணி பத்து முப்பது.

முதலில் நீல் கமலுக்குப் போன் செய்து சந்திக்க வேண்டிய இடத்தை முடிவு செய்துகொள்ள வேண்டும்.

இரண்டாவதாக சுநீதாவுக்கு 'டிரங்க்' போட்டுக் காத்திருந்து பேச வேண்டும் என்று முடிவு செய்து கொண்டான்.

நீல் கமலுக்கு ஒரு கடையிலிருந்து போன் செய்தான்.

ஒரு கட்டைக் குரல் போனை எடுத்தது.

'நீல்கமல் இல்லே... நீ யார்?' என்று கன்னடம் கலந்த தமிழில் கேட்டது.

போனை வைத்து விட்டான்.

கொஞ்சம் கழித்துப் போன் செய்யலாம் என்று தீர்மானித்தவனாக மல்லேஸ்வரன் சர்க்கிள் பஸ் ஸ்டாப்பில் சற்று நின்றான்.

பக்கத்தில் நின்றிருந்த ஒரு பர்தா போட்ட முஸ்லிம் பெண்மணி இவனிடம் வந்து உருது மொழியில் ஏதோ கேட்டாள்.

தனக்கு உருது தெரியாது என்று தமிழில் சொன்னான்.

அவளுக்குத் தமிழ் தெரிந்திருந்தது.

'எனக்குத் துணையாக பசவன்குடி வரை வரமுடியுமா?' என்று கேட்டாள்.

அவன் பதில் சொல்லு முன் ஒரு ஆட்டோவை நிறுத்தி ஏறி அவனையும் அழைத்தாள். ஏறிக்கொண்டான்.

ஆட்டோ கிளம்பியது. (தொடரும்

# குறிஞ்சிப்பூக்கள் எங்கும் பூக்கும்



போட்டிக்கதை-10

-ராஜேஷ்குமார்-

"கும்பிடறேன் டாக்டர் ஐயா..."

முழங்கை வரை க்ளவுஸை மாட்டிக் கொண்டு எருமை மாட்டின் வாய்ப்புறத்தில் கையை நுழைத்து அதனுடைய சுகவீனத்தைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்த நான் — எனக்குப் பின்புறத்தில் ஒலித்த குரலைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன்.

இசக்கி நின்று கொண்டிருந்தான் சுத வோரமாய். என்னவென்பது போல் புருவத்தை நெரித்தேன். இசக்கி அழுகிற குரலில் சொன்னான்.

"என்னோட லட்சுமிக்கு இன்னிக்கு இரவுக்குள்ளாற பெரசவம் ஆயிடும்போலிருக்கு டாக்டர் ஐயா."

"லட்சுமியா? யார் அது?" — இளப்பமாய்க் கேட்டேன். என் குரலில் மண்டியிருந்த சேஷ்டையைப் புரிந்து கொள்ள முடியாமல் இசக்கி இறுகிய முகத்தோடு சொன்னான்:

"என்னோட பசுமாடு சாமி... போன வருசம் அதுக்கு கெர்ப்பம் ஆறதுக்காக ஊசி கூடப் போட்டீங்களே... ஞாபகம் இல்லீங்களா? அது உண்டாகி செனையா நிக்குது சாமி... காத்தால புடிச்சு வலி அதிகமாயிடுச்சு. வலியாலே துடிக்குது சாமி..."

நான் இசக்கியின் பேச்சைக் காதில் வாங்கிக்கொள்ளாதவன் போல் க்ளவுஸை உருவிப் பக்கத்திலிருந்த பக்கெட்டில் வீசிவிட்டு எருமை மாட்டின் சொந்தக்காரரிடம் பேசினேன். பிறகு கையைக் கழுவிக் கொள்வதற்காகத் தண்ணீர்க் குழாய் அருகே சென்றேன். இசக்கி என்னைப் பின்தொடர்ந்து வருவது தெரிந்தது.

"டாக்டர் ஐயா...."

எரிச்சலோடு திரும்பினேன். "என்ன?"

"நீங்க சித்த நேரம் எனக்கோசரம் வந்து பார்த்தீங்கன்னு தேவலீங்க.... லச்சுமி வலியால துடிக்குதுங்க..." கண்கள் கலங்க என்னை ஏறிட்டான் இசக்கி. என்னுள் கோபம் சுறுசுறுவென்று ஏறியது.

"நீ கூப்பிட்டா நான் உடனே வந்துடணுமா? நீ வெச்ச ஆளா நான்? பேசாம போ... பிரசவம் தானா ஆயிடும்..."

நான் பாம்பாய்ச் சீறினேன்.

இசக்கி ஜாக்கெட் போடாத மாராப்பில் கண்களைத் துடைத்துக் கொண்டே படி இறங்கிக் கீழே நடந்தபோது பக்கவாட்டில் எழுந்த இளமைப் புடைப்புகள் என் நரம்புகளைச் சுண்டின.

போன வருஷம் நான் இந்தக் கிராமத்துக்கு 'மாட்டு டாக்டராக' இந்த வெட்டர்னரி ஆஸ்பிடலுக்குள் நுழைந்து — முதன் முதலாக இசக்கியைச் சந்தித்தபோது...

"நீங்கதான் புதுசா வந்த மாட்டு டாக்டரா சாமி?"

ஹெரால்ட் ராபின்ஸனைத் தலை கீழாகக் கவிழ்த்துவிட்டுத் திரும்பினேன். கதவு ஓரமாய் இசக்கி நின்றிருந்தாள். நல்ல கறுப்பு. ஆனாலும் அதில் இருந்த மினுமினுப்பு என்னை அயர வைத்தது. ஈட்டி மரத் துண்டத்தை பாலிஷ் செய்தாற்போல் பளபளத்த தோள் பட்டைகள் ரவிக்கை இன்றி வெறியூட்டின. அவள் மார்புப் பிரதேசம் என் மூச்சை அடைத்தது.

கீழ்க் குடியில் பிறந்த இவளுக்கு இப்படியொரு கிளர்ச்சியூட்டும் அழகா?

"என்ன வேணும்?" என்று கேட்டுக் கொண்டே எழுந்தேன். இசக்கி வெட்கப்

பட்டவள் போல் நெளிந்தாள். கைகளைக் குறுக்காகக் கட்டிக்கொண்டு இசக்கி பேசினாள்.

''ஒண்ணுமில்ல சாமி... என்னோட லச்சிமி இன்னும் உண்டாகல்ல... எனக்கு அவதாங்க தொணை.... அப்பனோ ஆயியோ இல்லாதஅநாதை சாமி! புருஷனும் ஜெயிலிலே இருக்காரு. கள்ளச் சாராயம் காச்சினாரு. ஜட்ஜூம் ஒரு வருஷம் ஜெயிலில் போட்டுட்டாரு. பொழப்புக்கு என்னோட லச்சிமியைத்தான் நம்பியிருக்கேன். செனையாகிக் குட்டி போட்டுப் பாலு வியாபாரம் பண்ணலாம்னு யோசனை. ஆனா லச்சுமிதான் செனையாயில்லே.....''

நான் சிரித்தேன். ''இதற்கா கவலைப் படறே? ஆர்டிபிஷியல் இன்ஸமினேஷன் கொடுத்தா உன்னோட லச்சுமி செனையாயிடும்.''

இசக்கி என்னைப் பார்த்து விழித்தாள்.

''சாயங்காலமா உன்னோட லச்சிமியைக் கூட்டிட்டு வா, ஊசி போடலாம்.''

இசக்கி தன் பற்கள் பளிச்சிடச் சிரித்துக் கொண்டே கையெடுத்துக் கும்பிட்டாள். என் பார்வையோ இசக்கியின் உடம்பு பூராவும் கட்டுப்பாடின்றி மேய்ந்தது.

அன்றைக்குச் சாயந்திரமே லச்சிமியோடு இசக்கி வந்து விட்டாள். இளமை குலுங்கப் படியேறி வந்தாள்.

அட்டெண்டர் கண்ணுசாமி இன்செக்ஷனோடு வந்தான்.

''லச்சிமிக்கு வலிக்காத மாதிரி ஊசி போடுங்க டாக்டர் ஐயா...''

நான் சிரித்துக் கொண்டே லச்சிமியின் அருகே சென்றேன். அடுத்த ஐந்து நிமிடத்துக்குள் லச்சுமிக்கு ஆர்டிபிஷியல் இன்ஸமினேஷன் செய்து முடித்தேன்.

''அவ்வளவுதான். கூட்டிட்டுப் போ...'' கண்ணுசாமி சொன்னான்.

''எப்ப சாமி கன்னு போடும்?''

''மனுஷ ஜாதி மாதிரி இதுக்கும் சரியா முந்நூறு நாள்.... உன்னோட வீட்டிலே கன்னுக்குட்டி துள்ளும்...''

இசக்கி வாய் விட்டுச் சிரித்தபடியே லச்சிமியை அழைத்துக் கொண்டு போகத் திரும்பினாள். கண்ணுச்சாமியைச் சிகரெட் வாங்கி வரச் சொல்லி அனுப்பிவிட்டு, இசக்கியிடம் மெல்லிய குரலில் கேட்டேன்.

''லச்சிமி ரொம்ப இளைச்சிருக்கே?''

''ஆமாஞ்சாமி...''

''நீ மேட்பே போடறதில்லையா?''

''ஏதோ போடறேன் சாமி... என்னோட வயத்துப் பாடே பெரிய பாடா இருக்கு..''

இசக்கி சலித்துக் கொண்டாள்.

''பணம் வேணும்னா நான் தரட்டுமா?''

''நீங்களா சாமி? கடனாகவா?''

''இல்லே. சும்மாத்தான்.''

''சொம்மாவா?.... வேணாஞ்சாமி...''— இசக்கி அவசர அவசரமாய்ச் சொன்னாள்.

''அப்படீன்னா ஈடு ஏதாச்சும் கொடுத்துட்டுப் பணம் வாங்கிக்க...''

''என் கிட்ட என்ன சாமி இருக்கு ஈடு குடுக்க....''

''சாயந்தரமா ஏழு மணிக்கு மேலே இருட்டின பிறகு இங்கே வந்துட்டுப் போ...பணம் தரேன்....''— சொல்லிவிட்டு அவள் முகத்தைத் தயக்கத்தோடு பார்த்தேன்.

''சாமி... நா கீழ்ச் சாதிப்பொம்பளைதா... ஆனா சோரம் போற கீழ்ப் புத்திக்காரியில்லே. ஒழுக்கம், மானம், மருவாதை உசந்த குலத்துப் பொம்பளைக்கு மட்டும் சொந்தமில்லே. என்னை மாதிரி சக்கிலிச்சிப் பொம்பளைக்கும் சொந்தம்தான்.... கடையிலே காசு குடுத்துக் கருப்பட்டி வாங்கற மாதிரி என்னோட உடம்பைக் காசு குடுத்துவாங்கப் பாக்கிறீங்க... ஒங்களுக்கு ஒரு வருசத்துக்கு முன்னாடிதான் கண்ணாலம் ஆயி பொஞ்சாதியோட இந்த ஊருக்கு வந்திருக்கிறதாக் கண்ணுசாமி சொன்னாரு.... ஒங்க பொஞ்சாதி இருக்கிறப்ப இந்தப் பொறம்போக்கு மேலே ஏஞ்சாமி ஆசைப்படறீங்க....? ஒங்க பொஞ்சாதியை விட நான் என்ன அம்புட்டு அளகா? அவங்க நிறத்துக்கு முன்னாடி நான் நிக்க முடியுமா? வேண்டாஞ் சாமி....''

இசக்கி மிக மெதுவான குரலில் — அழுத்தமாய், நிதானமாய்க் கூறிக் கொண்டு போனவள், அட்டெண்டர் கண்ணுசாமி வரு



வதைக் கண்டதும் பேச்சைச் சட்டென்று நிறுத்திவிட்டு லச்சிமியை ஓட்டிக் கொண்டு போக முற்பட்டான்.

அன்றைக்குப் போன இசக்கி மறுபடியும் இன்றைக்குத்தான் ஆஸ்பத்திரியில் நுழைந்திருக்கிறான்.

இசக்கியிடம் அப்படி முரட்டுத்தனமாய்ப் பேசியது என் வக்கிர மனத்துக்கு ரொம்பவும் இதமாய் இருந்தது. 'பெரிய கண்ணகி பரம்பரை! உனக்கு மட்டும்தான் வீருப்புக் காட்டத் தெரியுமோ? உன்னோட லச்சிமிக்குக் கன்று அப்நார்மல் பொஸிஷன்லதான் இருக்கு.... என்னோட உதவி இல்லாமல் உன்னோட லச்சிமி எப்படிக் கன்று போடும்னு பார்க்கிறேன்....!'

மதியத்துக்கு மேல் நாலைந்து கேஸ்களைப் பார்த்து மருந்தைக் கொடுத்துவிட்டு நாற்காலியில் சலிப்போடு சாய்ந்தபோது இசக்கி அவிழ்ந்த கூந்தலோடு காம்பவுண்டுக்குள் வேகமாக நுழைவது தெரிந்தது.

''ஐயா... டாக்டர் ஐயா... என்னோட லச்சிமி பிரசவ வேதனையில துடிக்கிறு ஐயா.. கன்னோட காலு ரெண்டும் வெளியே வந்து தொங்குதய்யா... நீங்க கொஞ்சம் வந்து பாருங்கய்யா....''

''இசக்கி! ஆஸ்பத்திரி ரூல்ஸ்படி நான் வெளியேவந்து வைத்தியம் பார்க்கக் கூடாது. எவனாவது மொட்டைக் கடுதாசி எழுதிப் போட்டான்னு என்னோட வேலையே போயிடும். வேணும்னு உன்னோட லச்சிமியை இங்கே கூட்டிக்கிட்டு வா பார்க்கலாம்...''

நிதானமாய்ச் சொல்லிவிட்டு பாக்கெட்டிலிருந்து சிகரெட் ஒன்றை உருவி, தீப்பெட்டியைக் கொண்டு பொருத்தினேன்.

இசக்கி கைகளைப் பிசைந்தாள். ''இந்த நெலமையிலே எப்படிங்க ஐயா லச்சிமியை நடத்திக் கூட்டிக்கிட்டு வர முடியும்? அது வாயில்லா சீவனுங்க.... ''

நான் புகையை ஊதினேன். ''அந்த வாயில்லா ஜீவனுக்காக நான் பரிதாபப்பட்டு வந்தா என்னோட வேலை போயிடும் இசக்கி.... கடையில காசு கொடுத்துக் கருப்பட்டி வாங்கற மாதிரி வேலையை வாங்க முடியுமா என்ன?''

இசக்கி அதிர்வது துல்லியமாய் எனக்குத் தெரிந்தது.

சைக்கிளைக் காம்பவுண்டுச் சுவர் ஓரமாய்ச் சாத்திவிட்டு வீட்டுப் படியேறினேன். கதவைத் தட்டுவதற்கு முன்பாகவே கதவு திறந்தது.

என் மனைவி சுஜா சிரித்த முகத்தோடு தலையைச் சாய்த்து என்னைப் பார்த்தாள்.

''நான் வர்றது எப்படித் தெரிஞ்சுது?''—ஆச்சரியத்தோடு கேட்டுக் கொண்டே அவள் மேல் மோதிக் கொண்டு உள்ளே நுழைந்தேன்.

''மெல்ல....மெல்ல... வயத்துல அடி பட்டா உங்க பையன் அழுவான்....''

சுஜா தன் மேடுற்ற வயிற்றைப் பிடித்துக்கொண்டு புன்னகைத்தாள்.

''எனக்கு முதல்லே சாதத்தைப் போடு... கலியனூர்க் கிராமத்துக்கு மினிஸ்டர் வர்றாராம். கோழிப் பண்ணையைத்தொடங்கி வைக்கப் போறாராம். இருக்கிற நாலைஞ்சு கிராமத்துக்கு நான் தானே மாட்டு டாக்டர்... வரச் சொல்லியிருக்காங்க.''

''எத்தினி மணிக்குத் திரும்புவீங்க?''

''ஆறு மணிக்கு மேலே ஆயிடும்...''

''சீக்கிரமா வந்துடுங்க. இந்த அத்துவானக் காட்டிலே இருட்டின பிறகு தனியா இருக்கிறதுக்குப் பயமா இருக்குங்க...''

''ம்....ம்....'' நான் ஷர்ட்டையும் பாண்டையும் கழற்றாமல் அப்படியே உட்கார்ந்து சாப்பிட்டு விட்டுக் கலியனூருக்கு விரைந்தேன்.

கலியனூர் கிராமத்தை விட்டுப் புறப்படும்போதே சாயந்திரம் ஆறு மணி ஆகி விட்டிருந்தது.

ஊரை நெருங்கி டிஸ்பென்சரியை அடைந்தபோது மசமசவென்று இருட்டிக்கொண்டு வந்தது. கண்ணுசாமி டிஸ்பென்சரி அருகே நின்றிருந்தான்.

சாவியை வாங்கிச் சட்டைப் பையில் போட்டுக் கொண்டு ''கேஸ் ஏதாச்சும் வந்ததா கண்ணுச்சாமி?'' என்றேன்.

''ஒண்ணும் வல்லை ஸார்... ஆறு இசக்கி தான் ரெண்டு மூணு தபா ஓடி ஓடி வந்தா... ஒங்களை எப்படியும் கூட்டிக்கிட்டுப் போற துக்காக அங்கியும் இங்கியும் அலைஞ்சா... ஒங்க ஊட்டுக்குப் போயிப் பார்க்கச் சொல்லி நான்தான் சொல்லி அனுப்பிட்டேன். சரின்னு ஒங்க ஊட்டுக்குப் போனவ அப்புறமா இங்க வல்லே.... இதுக்கு மத்தியிலே இசக்கியோட லச்சிமிக்குக் கன்று செத்தே பொறந்திச்சாம்.... நம்ம மன்னாரு சொல்லிட்டுப் போறான்.''

என் மனசுக்குள் மீண்டும் அந்தக் குரூர நிம்மதி தோன்றியது.

''சரி சரி... நீ வீட்டுக்குப் போ. ஒரு நாளைக்கு ஆயிரம் பிறக்குது ஆயிரம் சாகுது! அதையெல்லாம் பார்த்தா முடியுமா?''

''டி. வி. யார்சே..: அதான் அடாணா ராகத்தை அன்டாணா ராகம்னு எழுதியிருக்காங்க!''



நின்பதம் பாடல் வேண்டும்நான் போற்றி
நீறுபூத்து ஒளிர்குளிர் நெருப்பே
நின்புகழ் கேட்டல் வேண்டும்நான் போற்றி
நெற்றியங் கண்கொளும் நிறைவே
நின்வசமாதல் வேண்டும் நான் போற்றி
நெடியமால் புகழ்தனி நிலையே
நின்பணி புரிதல் வேண்டும்நான் போற்றி
நெடுஞ்சடை முடித்தயா நிதியே

— திருஅருட்பா





Dr. S. R. சிவராஜ்

# *It's a widening scene at Shriram Fibres*

One good thing leads to another for Shriram Fibres, leading manufacturers of Industrial Nylons.

The first product was nylon tyre cord for automotive tyres.

Then came nylon fishnet twine—proven 20% stronger than any other comparable brand.

**And now, a breakthrough - Nylon Chips.**
Shriram Fibres are the first to make Nylon Chips/ Moulding Powder in India—with quality that matches the world's best.

Shriram Fibres always look ahead...keep ahead.








## Shriram Fibres Ltd.

Thiru Building,
160, Greames Road. Madras-600 006

OBM 3768 R

நான் சைக்கிளை வீட்டை நோக்கித் திருப்பினேன். வீட்டை அடைந்ததும் கதவில் பூட்டுத் தொங்கியது.

சுஜா எங்கேயும் போக மாட்டாளே?

சைக்கிளைத் திருப்பிக்கொண்டு சுற்றுமுற்றும் பார்த்தேன். செம்மண் பாதையில் மூலையிலிருந்த அந்தப் பெட்டிக் கடையிலிருந்தும் அந்த லுங்கி கட்டிய ஆள் என்னை நோக்கி வருவது தெரிந்தது. சைக்கிளில் டிஸ்பென்ஸரிக்குப் போகும்போது பெட்டிக்கடை யருகே பல முறை அவனைப் பார்த்திருக்கிறேன்.

என்னை நெருங்கியதும் கேட்டான். ''உங்க ஒய்ஃபைத் தேடறீங்களா?''

நான் தலையை ஆட்டினேன்.

''உங்க ஒய்ஃப் இத்தனை நேரம் டவுன் பெண்கள் ஆஸ்பத்திரியிலே அட்மிட் ஆகியிருப்பாங்க!''

நான் அதிர்ந்தேன். ''ஆஸ்பத்திரியிலா? என்னாச்சு அவளுக்கு?''

''பெரசவம் ஆறதுக்காகத்தான்... வலி கண்டிடுச்சு....''

மீண்டும் அதிர்ந்தேன். பிரசவமா? ஏழாம் மாசத்திலேயா? — குழம்பினேன்.

''என்னப்பா சொல்றே? விவரமாச் சொல்லு.''

''சாயங்காலம் அஞ்சு மணியிருக்கும்; இசக்கிப் பொண்ணு என் கடையண்டை ஓடியாந்தா. அண்ணே...அண்ணே! டாக்டர் சம்சாரத்துக்குப் புள்ளை நோவு எடுத்துடுச்சு. டவுன் ஆஸ்பத்திரிக்குக் கூட்டிட்டுப் போவணும்.... ஏதாச்சும் வண்டி ஏற்பாடு பண்ணுன்னு சொன்னு.... நா நம்ம முருகனோட கூண்டு வண்டியை ஏற்பாடு பண்ணிக் கொடுத்தேன். இசக்கி உங்க சம்சாரத்தை வண்டில ஏத்திக்கிட்டு டவுன் ஆஸ்பத்திரிக்குப் புறப்பட்டுப் போனா.... இந்நேரம் கொளந்தை பொறந்திருக்கும்.''

'இசக்கி கூட்டிட்டுப் போனாளா?'

என் உடம்பு பூராவும் குப்பென்று வியர்த்தது. சைக்கிளைத் திருப்பிக்கொண்டு டவுன் ஆஸ்பத்திரியை நோக்கிப் பேயாய் ஓடினேன்.

எதிர்ப்பட்ட நர்சை மறித்தேன்; விசாரித்தேன்.

பரபரப்போடு நர்ஸ் சொன்னாள் ''ஆமா அந்தப் பொண்ணுக்கு இப்பத்தான் டெலிவரி ஆச்சு.... வெயிட்லெஸ் கேஸ்ட்... ஏழாம் மாசத்திலேயே பொறந்திருக்கு... ஜாக்கிரதையா கவனிச்சுக்கிட்டா தேறிடும்.. ஆமா... நீங்க யாரு?''

''அந்தப் பெண்ணோட ஹஸ்பெண்ட்.''

''ஓ!'' — அந்த நர்ஸ் வியப்பால உதடுகளைக் குவித்துவிட்டுப் பிரசவ வார்டை நோக்கிக் கையைக் காட்டினாள். ''அந்த வார்டுதான்.... கடைசி ரூம்... போய்ப் பாருங்க....''

நான் வராந்தாவில் ஓடாத குறையாக நடந்தேன்.

கடைசி அறையை அடைந்து கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தேன்.



''ஆபீஸ் ஃபைலை யெல்லாம் வீட்டுக்கு எடுத்துக்கிட்டுப் போறீங்களே! பேஷ்! வீட்டிலே கண் முழிச்சு ஆபீஸ் வேலையைப் பார்க்கிறீங்களா?''

''அதில்லே, ஃபைல் பக்கத்திலே இருந்தாத்தான் எனக்குத் தூக்கம் வரும்!''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

கட்டிலில் என் சுஜா படுத்திருப்பது தெரிந்தது. அருகே பெண் டாக்டர், நர்ஸுக்கு ஏதோ சொல்லிக் கொண்டிருக்க நான்' எக்ஸ்க்யூஸ்மீ' என்றேன்.

பெண் டாக்டர் திரும்பிப் பார்த்தாள். என்னைப் பார்த்தபடியே 'எஸ்' என்றாள். நான் சுஜாவைக் காட்டிச் சொன்னேன்: ''நான் அந்தப் பெண்ணோட ஹஸ்பெண்ட்... வெடர்னரி அஸிஸ்டெண்டாக இருக்கிறேன்.''

''ஐ....ஸீ.... நீங்க இப்பத்தான் வர்றீங்களா?'' — அவள் கேட்டாள்.

''எஸ் டாக்டர்.... கலியனூர்க் கிராமம் வரைக்கும் போயிருந்தேன்....நான் போகிற வரையில் ஷீ வாஸ் ஆல்ரைட். ஒரு பெய்னும் இல்லே. எப்படி.... திடீர்னு..... அதுவும் இந்த ஏழாவது மாதத்தில்....''—நான் வியப்பைக் கொட்டினேன்.

அந்தப் பெண் டாக்டர் புன்னகை செய்தாள். ''ஹௌ கேன் வி ஃபிக்ஸ் த டேட்? காட் ஈஸ் கிரேட்... உங்க ஒய்ஃப் ரொம்பவும் அதிர்ஷ்டம் செய்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் குழந்தை இருந்த அப்நார்மல் பொஸிஷனில் தகுந்த நேரத்தில் ஆஸ்பத்திரிக்கு வர முடியுமா? அந்தக் கறுத்த பொண்ணு மட்டும் சரியான நேரத்தில கூட்டி வராமெ இருந்திருந்தா உங்க ஒய்ஃபையும் உங்க குழந்தையையும் எங்களால காப்பாத்தியிருக்க முடியாது...''

என் இதயம் எங்கோ உடைப்பெடுத்துக் கொண்டாற்போல் பொங்கியது.

''தாங்க்யூ வெரிமச் டாக்டர்!''

''நோ காம்ப்ளிமெண்ட்ஸ் ஃபார் மீ... உங்க ஒய்ஃபைக் கூட்டிக்கிட்டு வந்த பொண்ணுக்குச் சொல்லுங்க.''

''கண்டிப்பாகச் சொல்கிறேன் டாக்டர்'' என்றேன். தெளிவுற்ற மனச் சுனையிலிருந்து பொங்கிப் பெருகிய நீருக்கு என் கண்கள் வடிகால்களாயின,

# ஒரு பழைய ஸ்கூட்டர் புதிய வண்ணம் பெறுகிறது...

## விஜயா வரதன்

ஈரக் காற்று இதமாக உடம்பை வருடிக் கொடுத்தது. கண் இமைகளைப் பிரிக்க முடியாமல் அசதி கண்களை இறுக்கியது.

சோம்பல் முறித்துக் கொண்டே எழுந்திருக்க மனமில்லாமல் எழுந்து வந்தாள் மாலதி. வெந்நீர் அடுப்பு பற்ற வைக்கச் சோம்பல். குளிரைத் தாங்கிக்கொண்டே, குள்ளக் குளிர எண்ணெய் தேய்த்துக் குளித்தாள் அவள். குளிர்ந்த நீரை மொண்டு ஊற்றிக் கொள்ளக் கொள்ள, சோம்பல் நீங்கி உடம்பு ரொம்பவும் சுறுசுறுப்பாகியது அவளுக்கு. அந்தக் காலை நேர இனிமைப் பொழுதில் விளக்கேற்றி, ஏதோ சுலோகங்களை முணு முணுத்துக் கொண்டே காப்பி போட உள்ளே வந்தாள் அவள். அவள் குளிக்கையிலேயே அம்மா எழுந்திருந்து காப்பி போட்டிருக்க வேண்டும். காப்பி அவளுக்காக உள்ளே காத்திருந்தது. அந்த நேரக் குளுமைக்கு, காப்பியின் சூடு தொண்டைக்கு இதமாக இருந்தது.

'இப்படியே ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும், ஒவ்வொரு நாள் பொழுதும் இன்றிருப்பதைப் போல மனதுக்கு ரம்மியமாய் அமைந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்?'

உள் மனத்தின் ஏக்கங்கள் உருவங் கொண்டு ஓலமிடும்போது, தன்னைத் தானே ஏமாற்றிக் கொண்டு, அம்மாவிடமும் வீம்பு பேசுவது அவள் மனத்திற்கு நன்றாகத் தெரிந்துதான் இருக்கிறது.

''நான்.....ஏன்.... இப்படி மாய்ந்து போகணும்! பத்து பன்னிரண்டு வருஷப் பொழுதை ஓட்டியாச்சன்னு.... நாற்பது வயசுக்கு மேலே நான் கிழவிதானே! இன்னும் புருஷன் குழந்தைன்னு பக்கத்திலே நான் ஏன் உழலணும்!'' தன் உள்ளத்திலிருந்து வரும் கேள்வியல்ல அது என்று புரிந்து விட்டது அவளுக்கு.

முதல் நாள் அம்மாவிடம் சண்டை போட்டதன் எதிரொலிதான் இந்த மன உளைச்சல் என்பது அவளுக்குப் புரிந்தது.

தனக்கு இனிமேல் ஒரு வாழ்க்கை அவசியந்தானா!

ஈரம் காய்ந்த தலையை வாரிக்கொள்ளும் போது, முன்னுச்சியில் திட்டாகத் தெரியும் வெள்ளை முடி சீப்புக்குள் அடங்காமல் திரும்பவும் தெரிகையில் ஏனோ அலுப்பாக இருக்கிறது. கண்ணுக்குக் கீழே வட்டமாகத் தெரியும் கருவளையமும், நெற்றியில் கோடாக விழும் சுருக்கங்களும் இன்னும் உனக்கு இளமை எத்தனை நாளோ என்று சவால் விடுவது போல் இருக்கிறது அவளுக்கு. எதுவுமே செய்து கொள்ளப் பிடிக்கவில்லை. தன் வாழ்க்கையின் முக்கியமான நேரங்கள் கடந்து போன பின் தனக்கு இனிமேல் ஒரு துணையா? மூப்பாகத் தலை நரைத்து ஓர் அரை வயசுக் கிழவன் கண் முன் தோன்றுகிறான்.

முந்தைய தினம் பஸ் ஸ்டாப்பிற்கு அடுத்தாற்போல் உள்ள ஆட்டோமொபைல் ஒர்க்ஷாப்பில், உருவம் மங்கி, தன் சாயம் வெளுத்து, தகர டப்பாவாய் நின்றிருந்த ஒரு ஸ்கூட்டர் நினைவுக்கு வந்தது. இனி அது அடுத்தாற்போல் காயலான் கடைக்குத் தான் லாயக்கு. அதைப் போலத்தான் அவளும்.....?

தான் கடந்து வந்த சிறு வயது நாட்கள் இளமைப் பருவ நாட்கள் — அவள் நினைவில் சிலந்தியாய் வலை விரிக்கிறது.

அப்பாவின் அந்தக் கம்பீரச் செருக்கு நிறைந்த முகமும் 'என் பெண் அழகுக்கு எவனாவது கொத்திண்டு போயிடுவான்!' என்று வாய் வார்த்தைகளால் எல்லோரிடமும் ஜம்பமாக மார் தட்டின நிலையும்! ஆனால் உண்மையில் அவரால் தனக்கு ஒரு மாப்பிள்ளையைத் தேடித் தரமுடிந்ததா?

அம்மா ஒவ்வொரு வரனாக வரும்போதும் சொஜ்ஜியும், பஜ்ஜியும் மணக்க மணக்கப் பண்ணி, ஆவலோடு காத்திருந்ததும், ஒவ்வொருத்தன் காலிலேயும் விழுந்து இவளாவது தன்னைப் பண்ணிக் கொள்ள மாட்டானா என்று ஓரக் கண்ணால் பார்த்து மானசீகமாக அவனோடு தன்னைப் பிணைத்துக் கொண்ட நேரங்கள், மனத்தால் மாகபடிந்ததுபோல் ஒரு துடிப்பு இன்னும் தனக்குள் அடங்கவில்லை....

அப்பா மாத்திரம் ''ஒரு பைசா வரதட்சிணைன்னு கொடுக்க மாட்டேன்!''என்று கண்டிஷன் போடா விட்டால் தான் ஒரு அம்மாவாய், மனைவியாய் இருந்திருக்கலாம். தனக்கு அந்தப் பதினேழு வயதிலிருந்து இருபது வயது வரை உள்ள, அழகான, பார்த்தவர் அடுத்தாற்போல் திரும்பிப் பார்க்கும்படியான தோற்றம் இருந்தும் ஏன் ஒருவரும் முன் வரவில்லை?... பணம்! அப்பாவின் அதிரடிப் பேச்சில் நம்பிக்கையில்லை. தானேதான் வருத்துக்கொண்ட நிலையிலிருந்து கீழிறங்கி ''எவ்வளவு செலவானாலும் உடனடியா முடித்தே தீருவேன்!'' என்று ஆவேசமாக அப்பா முனையும்போது தங்கை கலா இப்படிச் செய்வாள் என்று அப்பாவே எதிர்பார்க்கவில்லை.

தான் படும் அவஸ்தையைப் பார்த்தோ, தனக்கு அப்பாவால் உடனடியாக நல்ல இடமாகப் பார்த்துக் கல்யாணம் முடிக்க முடியாது என்ற நம்பிக்கை இழந்து போயோ, ஒரு கால் கடிதாசியில் தன் செய்



கைக்கு விளக்கம் சொல்லி விட்டு, மனத்துக்குப் பிடித்தவனோடு வெளியேறிப் பதிவுத் திருமணம் செய்து கொண்டு விட்டாள் தங்கை.

தங்கையின் மறைமுகத் திருமணம் காற்று வாக்கில் பல வதந்திகளை ஆங்காங்கே பரப்பிக் கொண்டிருந்தது. அடுத்தாற் போல் மனமிடிந்த அப்பா இப்படி, தனக்கு ஒரு வழி பண்ணாமல் போவார் என்று அவன் கனவிலும் நினைத்துப் பார்க்கவில்லை. கலாவின் நினைவே அவருக்குப் பேரதிர்ச்சியாய், அவரையே முழுங்கி விட்டது. தன் பங்கிற்கு ஏதோ சமாதானம் சொல்லிவிட்டுத் திரும்பவும் தொலை தூரத்து வேலைக்குப் போய் விட்டான் அண்ணன்.

கணவன் போன அதிர்ச்சியோடு, தன் சின்னப் பெண்ணைப் பற்றிய அதிர்ச்சி நினைவுகளால் மாலதியைப் பற்றிய சிந்தனையே ஏதுமில்லாமல் வாழ்நாளை ஓட்டிக் கொண்டிருக்கிறாள் அம்மா.

இளமைக் காலத்துக் கனவுகள் நசுக்கப்பட்டு, தானும் ஒரு சம்பாதிக்கும் இயந்திரமாக மாறியபிறகு வாழ்வின் பிடிப்பே மரத்துவிடுகிறது மாலதிக்கு.

''உன் பெரிய பெண் கல்யாணத்துக்காகவும், சின்னப் பெண் எவனோடு ஓடிப்போயிட்டாங்கறத்துக்காகவும் எனக்கு நாளைத் தள்ளிப் போட்டா எனக்கு நானே பொண்ணைப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுடும்!'' என்று அண்ணாவின் பயமுறுத்தல் கடுதாசியின் வாசகத்தால் தாக்கப்பட்டு, உடனடியாக ஒரு பொண்ணைப் பார்த்து அவனுக்கும் திருமணத்தை முடித்து விடுகிறாள் அம்மா.

மன்னி வந்து ஒரு குழந்தைக்குத் தாயுமாகிவிட்டாள். காலங் கடந்த ஞானோதயத்துடன் மாலதிக்கு இனியாவது கல்யாணம் ஆகவேண்டுமே என்ற துடிப்பில், வேகத்தில் ஜாதகத்தை எடுத்துக்கொண்டு ஜோசியர் வீட்டுக்கும் தரகர் வீட்டுக்கும் அலையாய் அலையும் அம்மாவின் கவலையை நினைத்தால் இப்பொழுது சிரிப்புத்தான் வருகிறது மாலதிக்கு.

அப்பா போய்ப் பத்து வருஷங்கள் கழித்து அம்மாவுக்குத் திடீரென்று ஏற்பட்டிருக்கும் ஞானோதயம் முன்னமே ஏற்பட்டிருந்தால்? முன்னுச்சி மயிர்கள் வேகமாகக் காற்றில்

பறக்கிறது: கையால் அழுத்தி ஒதுக்கிக் கொள்ளும்போது — வெள்ளையாய் நரை முடி அசிங்கமாக இருக்குமோ!

பஸ் ஸ்டாப்புக்கு அடுத்த ஒர்க்ஷாப்பில் நிறம் மங்கிப்போன அந்த ஸ்கூட்டரைப் பிரித்து ஒவ்வொரு பகுதியாகத் தேய்த்துக் கழுவி... சிவப்பில் சாயம் பூசிக் காயவைத்திருந்தது நினைவுக்கு வருகிறது. தானும் துளி மையைத் தலையில் அந்த இடத்தில், வெள்ளை முடி தெரியாமல் தடவிக் கொண்டிருக்கலாம்!

“மாது! உங்கண்ணா கடிதாக எழுதிவிருக்கான். யாரோ ரொம்பத் தெரிஞ்ச பையன் போட்டோவை வைச்சு அனுப்பிவிருக்கான். சித்த பார்த்துட்டு என்ன பதில் எழுதணும்னு சொல்லிட்டுப் போடியம்மா!” ஆபீஸ் போகும் அவசரத்தில் கடிதத்தைக் கொடுக்கிறாள் அம்மா.

அம்மாவின் சொற்கள் இதுவரை நீறு பூத்த கனலாகக் கனன்று கொண்டிருந்த அவளைத் தகிக்கிறது.

“அப்பா போய்ப் பத்து வருஷம் கழிச்சு மாப்பிள்ளை பாருங்கோ....! எனக்கு இப்போ வயசு முப்பத்திரண்டு ஆறது. என் வயசிலே உனக்கு நானே பிறந்துட்டேன். திரும்பவும் இப்போ நான் மறுபடியும் காட்சிப் பொருளாக வரவாளுக்கு இருக்கணும்.... இப்படிப்பார்த்துண்டே இருங்கோ. அதுக்குள்ளே நிச்சயம் நான் கிழவியாயிடுவேன்.... வேலையத்து அவன் எழுதியிருக்கானும்....பதில் போடணுமாம்! என்னை நிம்மதியா இப்படியே இருக்க விட்டுட்டு, உன் பிள்ளையோட போய் இருந்துக்கோ! நான் நாளைக்கே உனக்கு ரயிலுக்கு டிக்கெட் வாங்கிண்டு வந்துடறேன்!” வார்த்தைகளை எண்ணெயில் போட்டுக் கடுகாக வெடிக்க விட்டு, வேகமாகப் படியிறங்கிப் போகிறாள் மாலதி.

அம்மா ஏதோ சொல்லிக் கொண்டு பின்னாலேயே அழுது கொண்டு வாசற்புறப் படிக்கட்டில் நிற்பது தெரிகிறது அவளுக்கு. எப்படியோ பஸ் ஏறி ஆபீசுக்கு வந்து சேருகிறாள் அவள்.



“ஏய் சாந்தா! உன்னைக் கட்டிக்கிட்டது போதாதுன்னு நீ வாங்கற அத்தனை பத்திரிகைகளுக்கும் சந்தா கட்டித் தொலைக்க வேண்டியிருக்கு! இனி உன் பெயர் சாந்தா இல்லே... சந்தா!”

இடைவேளைச் சாப்பாட்டின்போது சக ஊழியர்களின் பேச்சுக்களில் திரும்பவும் தன் வாழ்க்கையின் முழு அர்த்தமும் புரியாமல் தடுமாறுகிறாள் அவள். சொற்ப ஊதியமான 200 ரூபாயில் தன் வாழ்நாள் முழுவதும் ஏதோ ஒரு விடுதியில் தங்கிறைல் கழித்துவிட முடியுமா? தன்னுடைய இயலாமை அவளுக்குப் பெரும் பிரச்னையாக இருக்கிறது.

கூண்டிலிருந்து விடுபட்ட பறவைகளாக, அலுவல் முடிந்து சோர்வு கலந்த ஏதோ இனிமையில் ஜனக் கூட்டம் பஸ்ஸுக்காகக் காத்திருக்கிறது.

நிமிஷத்துக்கொருதரம் பஸ் சீறிக்கொண்டு வர பஸ் ஸ்டாப்பில் கூட்டம் கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைகிறது.

தன் பஸ் வரவில்லையென்று தவிப்பிருந்தாலும், அடுத்த ஒர்க் ஷாப்பில் தான் காலையில் பார்த்த ஸ்கூட்டரின் நிலையை ஒரு புதிய ஆர்வத்தோடு கவனிக்கிறாள் மாலதி.

சிவப்புச் சாயம் பூசப்பட்ட ஸ்கூட்டரின் பாகங்கள் ஒவ்வொன்றும் புது நிறப் பச்சை வண்ணத்தில் மின்னிக் கொண்டிருந்தது. கடைப் பையன் ஒவ்வொரு பாகத்தையும் பிடித்துக் கொள்ளக் கடைக்காரர் பச்சை வண்ணப் பெயிண்டை அதன் மேல் ஸ்ப்ரே செய்து கொண்டிருந்தார். மறுநாள் காலை அநேகமாக எல்லாப் பாகங்களும் பொருத்தப்பட்டுப் பச்சை வண்ண நிறத்தில் புத்தம் புதிய ஸ்கூட்டர் தயாராகிவிடும் அந்தக் கடையில்.

சரேரென்று ஏதோ மாலதியின் புலனுக்குள் புகுந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்தது. கேவலம் காயலான் கடைக்குத்தான் லாயக்கு எனத் தான் நினைத்த ஸ்கூட்டர் பழுது பார்க்கப்பட்டு, புதுவண்ணம்கொண்டு தான் இன்னும் உழைக்கத் தயாராகி விட்டது. அந்த ஜடப் பொருளைக் காட்டிலும் தான் ஒன்றும் குறைந்தவள் அல்ல என்பது அவளுக்குத் தெளிவாகத் தெரிந்தது. தன்னைப் படைத்த மனுஷனுக்காக ஆயுட்காலம் வரை உழைக்கத் தயாராகிவிட்டது அது. கடவுள் படைத்த இந்த மனித உயிரின் கடமைகள் அனந்தம்.

தனக்குள்ளே பொசிந்து கிடந்த முதுமை உணர்ச்சிகளைக் களைந்துவிட்டு, இளமை உணர்ச்சிகள் பொங்கச் சிறு பெண்ணும் பஸ்ஸுக்குள் தாவி ஏறிக்கொண்டாள் அவள். அவளறியாமல் நடையில் ஒரு துள்ளல். அண்ணாவுக்குப்போன உடனே சம்மதம் தெரிவித்துக் கடிதம் எழுதணும். அம்மா கிட்டேயும் விஷயத்தைச் சொல்லிச் சந்தோஷப்படுத்தணும்; நினைப்பே அவளுக்கு இனிப்பாக இருந்தது.

அவள் மணாளன், பச்சை நிற வண்ணமோ மஞ்சள் நிற வண்ணமோ கொண்ட பளபளப்பான அந்த ஸ்கூட்டர் மாதிரி ஒரு ஸ்கூட்டரில் வருவான்.

வீட்டு வாசற்படி ஏறித் துடிப்போடு உள்ளே நுழைகையில் சர்ரென்று ஓசையிட்டுக் கொண்டே தெருவில் சென்ற ஸ்கூட்டர் ஒன்று அவள் பார்வையில் பட்டு மறைந்தது.

X-RAY

# தேவராஜ் அர்ஸ்

1969ம் ஆண்டு காங்கிரஸை இரண்டாக உடைத்து இந்திரா வெளியேறியபோது அவரிடம் காணாத யதேச்சாதிகாரத்தனத்தை நெருக்கடிக் காலத்தின்போது மொரார்ஜி, ஜே. பி. உட்பட பல அரசியல் தலைவர்களையும் சிறையில் தள்ளி இந்திரா ஆட்சி செய்த போது அவரிடம் காணாத அதிகார துஷ்பிரயோகத்தை, 1978ல் காங்கிரஸை மறுபடியும் உடைத்துவிட்டு இந்திரா வெளியே வந்தபோது அவரிடம் காணாத சர்வாதிகாரத்தை தேவராஜ் அர்ஸ் 1979ம் வருடம் கண்டுபிடித்து அறிக்கை விடுத்து இந்திராவிடம் இருந்து வெளி வந்ததும் உலகமே கை தட்டி வரவேற்றது. அதோடு இல்லாமல் சுவரண் சிங் காங்கிரஸ் அவருக்குத் தமது கட்சியின் தலைமைப் பதவியையே கொடுத்துக் கௌரவித்துள்ளது! பாவம் பசி ஏப்பக்காரர்கள்!

ஆனால் ஒரு விதத்தில் அர்ஸ் பாராட்டுக்குரியவர்தான். தமது செல்வாக்குச் செல்லுபடியாகிற மாநிலத்திலேயே தம்மை மட்டம் தட்டும்படி இந்திரா நடந்துகொள்ள முயன்றபோது, தன்மானம்தான் பெரிது என்று உணர்ந்து தைரியமாக இந்திராவை எதிர்த்து வெளிவந்திருக்கிறாரே, அதைப் பாராட்டித்தானே ஆகவேண்டும்.

கர்னாடக மாநில அரசியலில் இந்திய சுதந்திரம் பெற்ற காலம் முதல் உழன்று கொண்டிருந்த திரு அர்ஸ், நிஜலிங்கப்பா வீரேந்திர பாடீல் ஆகிய முதலமைச்சர்களுடைய மந்திரி சபையில் பதவி வகித்திருந்தாலும் பின்னணியிலேயேதான் இருந்தவர். 1969ல் காங்கிரஸ் உடைந்தபோது இந்திராவை இவர் தீவிரமாக ஆதரிக்க ஆரம்பித்ததும்தான் இவருக்கு ஒரு நல்ல எதிர்காலம் பிறந்தது. 1972ல் முதலமைச்சரானார். இந்திராவின் நம்பிக்கைக்குப் பாத்திரமான முதல்வராக விளங்கி நெருக்கடி காலத்தின்போது அவருக்குப் பக்கபலமாக நின்றார். 1977ம் ஆண்டு ஜனதா ஆட்சிக்கு வந்ததும் தேவராஜ் அர்ஸ் மீது லஞ்ச ஊழல்கள் குற்றம் சாட்டப்பட்டு 'குரோவர் கமிஷன்' அமைக்கப்பட்டது. 1977ம் ஆண்டு ஜனாதிபதியால் இவரது மந்திரி சபை 'டிஸ்மிஸ்' செய்யப்பட்ட போது, 'அர்ஸின் அரசியல் வாழ்க்கைக்கு 'முற்றுப்புள்ளி' என்று ஏகோபித்த அபிப்பிராயம் நிலவியது. ஆனால் 1978 தேர்தலில் இந்திராவுக்கு வெற்றி வாகை சூடித் தந்து மறுபடியும் கர்னாடக முதலமைச்சராக இவர் ஆனபோது, உலகமே இவரது செல்வாக்கைக் கண்டு ஆச்சரியப் பட்டது.

முதலமைச்சராக இருந்தபோது அதிகார துஷ்பிரயோகம் செய்து தமது சகோதரர் கெம்பராஜ் அர்ஸுக்குச் சலுகைகள் அளித்தது, மருமகன் நடராஜுக்கு நிலம் வழங்கியது போன்ற குற்றச்சாட்டுகள் சரிதான் என்று கூறுகிறது குரோவர் கமிஷன்.

எமெர்ஜன்ஸி காலத்தில் அர்ஸும், சஞ்சயும் கூடிக் குலாவியது அனைவரும் அறிந்த கதை. சமீபத்தில் சண்டே பத்திரிகைக்கு அளித்த பேட்டியில், 'தாயின் பதவியை உபயோகித்துக் கொண்டு, பின்னாலிருந்து செயல்படாமல் சஞ்சய் தானாக முன்னுக்கு வந்தால் அவரை நான் பாராட்டுவேன்' என்று அர்ஸ் கூறியிருக்கிறார்.

இந்திராவை எதிர்ப்பதற்காகத் தமது கடும் எதிரியான பிரம்மானந்த ரெட்டியுடன் அர்ஸ், ஒத்துப் போயிருப்பது உலக மகா அதிசயம். சரண் சிங் மந்திரி சபையில் (பழைய) சுவரண் சிங் காங்கிரஸ் இணைந்ததற்கு முக்கிய காரணமே அர்ஸ்தான்!

பல கட்சிகளில் சிதறிக் கிடக்கும் காங்கிரஸ்காரர்களை ஒருங்கிணைத்து காங்கிரஸைப் பலப்படுத்தும் முயற்சியில் தற்போது அர்ஸ் இறங்கியிருக்கிறார். வெற்றி பெற்றால் அவர் செய்துள்ள பல பாப காரியங்களுக்கு அது ஒரு பிராயச்சித்தமாகவும் அமையும்.

'என்னால்தான் அர்ஸுக்குக் கர்னாடகாவில் செல்வாக்கு' என்பது இந்திராவின் வாதம். 'இந்திரா என் செல்வாக்கு இல்லாமலிருந்தால் சிக்மகளூரில் தோற்றிருப்பார்' என்பது அர்ஸின் நம்பிக்கை.

ஜனவரி மாதம் குழந்தை பிறந்தால் ஆணா பெண்ணா என்று தெரியாமலா போய்விடப் போகிறது?

— பி. ரங்காயவி





# தமிழ் இலக்கிய அமைப்புகளுக்கு ஓர் வேண்டுகோள்

ஐந்தாவது உலகத்தமிழ் மாநாடு 1980ஆம் ஆண்டு
மதுரை மாநகரில் சிறப்பாக நிகழவுள்ளது.
தமிழகத்திலும், இந்தியாவின் பிற
மாநிலங்களிலும் அயல்நாடுகளிலும் உள்ள
தமிழ் இலக்கிய அமைப்புகள் சிறந்த பணிகளைப்
புரிந்து வருகின்றன. அத்தகைய
அமைப்புகளின் பட்டியலொன்றைத்
தயாரிப்பதற்காக அவ்வமைப்புகள் தத்தம்
முகவரியையும் ஆற்றிவரும் பணிகளையும்
தெரிவிக்க வேண்டுகிறோம்.






தனி அலுவலர்
5வது உலகத் தமிழ் மாநாடு
கல்வித்துறை
தமிழ்நாடு அரசு தலைமைச் செயலகம்,
சென்னை-600 009.




ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகள்

இந்த ஒரு வருஷத்துக்குள்ளேயே அங்கத்தினர் குற்றம் பண்ணினால் உடனே பதவி நீக்கம்தான்! ("வாரியஞ் செய்யா நின்றாரை அபராதங்கண்டபோது அவனை யொழித்துவதாகவும்.") அப்போது எப்படி அந்த ஸ்தானத்துக்கு 'பை-எலெக்ஷன்' (இடைத் தேர்தல்) நடத்தினார்களென்றால் ஊரில் முப்பது வார்டு தவிர, அவரவர் ஸ்வதர்மப்படி கர்மா செய்வதற்காகப் பன்னிரண்டு சேரிகளாகப் பிரித்து, அது ஒவ்வொன்றிலும் தர்ம காரியங்களைக் கவனித்துப் பரிபாலிப்பதற்காக ஸபைகள் இருந்தன. இந்தப் பன்னிரண்டு ஸபையின் அங்கத்தினர்கள் மத்தியஸ்தர்களை வைத்துக் கொண்டு ஒன்று கூடிக் காலியான ஸ்தானத்துக்கு டெம்பரரியாக ஒருவனைப் போடுவார்கள். "பன்னிரண்டு சேரியிலும் தர்மம் கிர்த்தயங்கடைகாணும் வாரியரே மத்யஸ்தரைக் கொண்டு குறிகாட்டிக் குடுப்பாராகவும்" என்று இருக்கறது. அந்த வருஷம் முடிந்ததும் ஜனநாயகக் குடவோலை முறைப்படி எலக்ஷன் நடக்கும்.

தங்கள் ஊரில் கெட்டவர்கள் போய், நல்லவர்கள் வளருவதற்காக இவ்வருஷத்திலிருந்து சந்திர–ஸூரியர்கள் உள்ள அளவும் இம்மாதிரி குடவோலை அமைப்போம் என்று சாஸனம் முடிகிறது. "இப்பரிசே இவ்வாண்டு முதல் சந்திராதித்தியவத்தென்று குடவோலை.... நங்கிராமத்துக்கு அப்பியுதயமாக (அப்யுதயம் என்றால் க்ஷேம அபிவிருத்தி) துஷ்டர் கெட்டு விசிஷ்டர் வர்த்திப்பதாக (அதாவது சிரேஷ்டர்கள் வளர்வதாக) விவஸ்தை செய்தோம்–உத்தரமேரூர் சதுர்வேதிமங்கலத்து சபையோம்" என்று இருக்கிறது. "சபையோம்" என்றால் "ஸபையினரான நாங்கள்" என்று அர்த்தம்.

இப்போது நாம் இருக்கிற ஸ்திதியிலிருந்து மீளப்போகிறோமா என்று இருக்கிறது. மீள்வதா, இன்னும் மோசமாகத்தான் போய், லஞ்சமும், பொய்யும், கட்சிப் பிரதி கட்சிகளும் வளர்ந்து தேசம் வீணாகப் போகிறதா என்று பயப்படும்படி சூசனைகள் காண்கின்றன. ஒரு பக்கம் ஜாதி–மதம் இல்லாத ஸமதர்ம ஸமுதாயம் என்று சொன்னாலும், வாஸ்தவத்தில் ஜாதிக் கட்சி, ஊர்க் கட்சி, தெருக் கட்சி, ஒவ்வொரு கட்சிக்குள்ளேயும் உள் கட்சி என்றெல்லாம் ஏற்பட்டு, பணத்தாலும், மோசத்தாலும் முதலில் ஜனங்கள் கட்சிக்குக் கட்சி மாறுவதாகவும், அப்புறம் கட்சிக்காரர்களே ஒன்றிலிருந்து இன்னொன்றுக்கு மாறுவதாகவும், எந்த லக்ஷியமும் இல்லாமல் பண்ணுவதற்கெல்லாம் இப்போதே விதை விதைத்து விட்டதாகத் தோன்றுகிறது. இந்த ஸமயத்தில் பழைய நாளில் பல யோக்கியதாம்ஸங்களை–முக்கியமாக, தர்மப் போக்கை, அர்த்த சுத்தத்தை, மனச் சுத்தத்தை — வைத்து நடந்த தேர்தலைப் பற்றி நினைப்பதே கொஞ்சம் தேறுதலாக இருக்கிறது. எப்போது பார்த்தாலும் கட்சி அரசியலில் சக்தி விரயமாவது இல்லாத ஒரு முறை அநுஸரிக்கப்பட்டது என்பதை அறிய ஆறுதலாக இருக்கிறது. அந்த ஏற்பாட்டிலே குறைச்சல் சீட்டு வாங்கினவர்களும் எலெக்ட் ஆக இடம் இருந்ததே என்று ஒரு முறை தோன்றினாலும், சீட்டிலே பெயர் போடப்படுகிற எல்லோருமே உத்தமர்கள்தான் என்பதால் இது ஒரு பெரிய குறையாக நினைக்கப்படுவதற்கில்லை. மத்யஸ்தர்களையும் நம்பிமார்களையும் வைத்துக்கொண்டு சீட்டுக்களை எண்ணியே அதிகபட்சம் வாங்கினவரைத் தேர்ந்தெடுப்பதற்குத் தாராளமாக இடம் இருந்தும், வேண்டுமென்றேதான் இப்படிச் செய்யவில்லை. மெஜாரிட்டி, மைனாரிட்டி என்ற பேதமும், துவேஷமும் ஏற்படாமல், எல்லோருக்கும் ஏகோபித்ததாகக் காரியங்கள் நடக்க வேண்டும் என்ற உசந்த அபிப்பிராயத்தில்தான் மெஜாரிட்டி பார்க்காமல், குழந்தையை விட்டுச் சீட்டுப் பொறுக்கும்படி பண்ணியிருக்கிறார்கள். அதுவும் தவிர நவீன கணித சாஸ்திர நிபுணர்கள் Probability Test படி, (இன்னாருக்குத்தான் பெரும்பான்மை இருக்கும் என்ற ஹேஷ்யப் பரிக்ஷையின்படி), வாஸ்தவமாகவே யாருக்கு மெஜாரிட்டி பலம் உண்டோ அவருடைய சீட்டையேதான் பெரும்பாலும் குழந்தை எடுக்கக் கூடும் என்கிறார்கள். அப்படியே ஏதாவது கொஞ்சம் குறையிருந்தாலும் மொத்தத்தில் உத்தரமேரூர் சாஸனத்தை நினைக்கிறபோது அந்த முறையால் தேசத்துக்கு எத்தனை லஞ்சமும் பொய்யும் கட்சிவாதமும், கட்சிப் பத்திரிகைகளின் ஸாஹஸங்களும் — மிச்சம் என்பதையே எண்ணித் திருப்திப்படத் தோன்றுகிறது. (முற்றும்)




கபாடி தமிழ்நாட்டுக்குப் பெருமை தேடித் தரும் விளையாட்டு. தமிழ்நாடு மூன்று வருஷங்களுக்கு முன்பு தேசிய விருதைப் பெற்றிருக்கிறது. இது சர்வதேச ஆட்டமாக வருகிற ஆண்டிலிருந்து ஆகும் என்று தெரிய வருகிறது. பொங்கல் திருநாளன்று கிராமப்புற விளையாட்டுக்களில் இது அதி முக்கியத்துவம் பெற்றிருக்கிறது. இந்த ஆட்டத்துக்குப் புத்திசாலித்தனம், ஒற்றுமையுணர்வு மூச்சுப் பிடிக்கும் திறன் ஆகியவை தேவை. கபாடி ஆட்டத்தை எந்த வயதுக்காரரும் ஆடலாம். ஏழைகளின் விளையாட்டு. எந்தச் சாதனமும் உபகரணமும் தேவையில்லை. விசேஷ இடமும் வேண்டாம். பெண்களும் இப்பொழுது கபாடி விளையாடுகிறார்கள்.

தி. நகர் ராமகிருஷ்ண மெயின் உயர்நிலைப் பள்ளியின் கபாடி ஆசிரியர்கள் திரு ஏ. எஸ். என். ராஜுவும், கோபிநாத்தும் பள்ளி மைதானத்தில் கல்கி பத்திரிகைக்காகவே பிரத்தியேகமாகக் கபாடி ஆட்டத்துக்கு ஏற்பாடு செய்தனர்.

லெனின், சக்திவடிவேல், அமல், இளஞ்சந்திரன், புவராக, விஜயபாஸ்கர், தக்ஷிண மூர்த்தி ஆகியோர் முழு மூச்சுடன் போராடுவதைக் காணலாம்...

புகைப்பட நிபுணர் உத்ரா கூறுகிறார்:

இந்தப் படத்தை ஆஷாஹி பென்டெக்ஸ் நார்மல் லென்ஸில் எடுத்தேன். 1.8/55 பாஸ்ட் பிலிம் உபயோகப் படுத்தியதால் 1/1000ல் என்றால் எடுக்க முடிந்தது. குந்தத்தின் கோணத்தை மையமாக வைத்து, எதிரிகளிடமிருந்து ஒரு மாணவன் திமிறிக் கோட்டையைப் பிடிக்க முயலும் கட்டத்தில் 'கிளிக்' செய்தேன். மாணவன் ரவிச்சந்திரனின் பகீரதப் பிரயத்தனம் உங்களுக்குத் தெரிகிறதல்லவா?..

படம்: உத்ரா

தகவல்: குண்டுமணி

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600 032. Editor: K. Rajendran

# புதிய திருப்பம்

ஒளி கூட்டும் ஸ்டைல்கள்—
எழில் காட்டும்
புதிய பாணிகள் — உங்கள்
அழகுக் கோலத்தை
வெளிப்படுத்தும்.

**மபத்லால் இண்டஸ்ட்ரீஸ்** நியூ ஷொராக் மில்ஸ்
**மபத்லால் ஃபைன்**

சூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள்,
சேலைகள், மற்றும் உடுப்புத் துணிகள்













79/MFI/312-tm

